தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீடு எண், 389.

|| श्रीः ||

श्रीमयूरकविप्रणीतं

# || सूर्यशतकम् ||

ஸ்ரீ மயூரகவி இயற்றிய

# ஸூர்யசதகம்

( ஸம்ஸ்கிருதம் — தமிழ் உரையுடன் )

பதிப்பாசிரியர் :

வேதாந்த சிரோமணி, தமிழ் வித்வான்

**என். ஸ்ரீநிவாஸன்,**

ஸம்ஸ்க்ருத பண்டிதர்,

சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்**

தஞ்சாவூர்.

விலை : ரூ. 50-0

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு



| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | சூர்ய சதகம் |
| பதிப்பாசிரியர் | : | என். ஸ்ரீநிவாசன் |
| வெளியிடுபவர் | : | இயக்குநர், சரசுவதி மகால் நூலகம். |
| வெளியீட்டு எண் | : | 389 |
| மொழி | : | சம்ஸ்கிருதம், தமிழ் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | அக்டோபர், 1998. |
| தாள் | : | 13.7 கிலோ-சேஷசாயி |
| நூல் அளவு | : | 21 X 14 செ.மீ. |
| பக்கங்கள் | : | 224 |
| படிகள் | : | 500 |
| எழுத்து | : | 16, 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : | சரசுவதி மகால் நூலக அச்சகம் |
| புத்தகக்கட்டு | : | மெலிந்த அட்டை |
| பொருள் | : | காவியம் |
| விலை | : | ரூ. 50—00 |




# வெளியீட்டாளர் முன்னுரை

ஆற்றல் மிக்கதொரு கோளாக விளங்குவது சூரியன். ...வின்றி உலகில் எந்தச் செயலையும் செய்யமுடியாது. ...உயிரினங்களே வாழமுடியாது. இதனால்தான் ...மக்கள் சூரியனை தெய்வமாகவே வழிபட்டு ...கின்றனர்.

இத்தகைய ஆற்றல் மிக்க சூரியனையே 'பாடு...ளாக'க் கொண்டு பாடப்பட்டதே "சூரிய சதகம்". ...வடமொழிச் சிற்றிலக்கியமாகவும், தோத்திர ...களம் விளங்குகிறது. இந்த நூலை 7ஆம் நூற்றாண்...ாழ்ந்த மயூரகவி என்னும் புலவர் இயற்றியுள்ளார். ...ல்' அச்சில் வெளிவந்திருந்த போதிலும். இதற்குரிய ...நூலான 'ப்ரபாவளீ' என்னும் உரை நூல் இதுவரை ...ப்பெறவில்லை. சரஸ்வதி மஹால் நூலகத்தில் ...ப்படும் ஒரே சுவடியான இந்த உரைநூல் முதன் ...ாக தற்போது அச்சில் வெளிவருவது மகிழ்ச்சிக்குரிய .... இதைப்போலவே 'தமிழில் உரையுடன்' முதன் ...ல் வெளிவருகிறது என்பதும் குறிப்பிடத்தக்கது.

பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்"

மகாகவி பாரதியார் வாக்கிற்கிணங்க தமிழாக்கம் ...யப்பட்டுள்ளது இந்த சூரிய சதகம்.

இந்த நூலின் 'நூன்முக'த்தில் நவீன விஞ்ஞானக் ...துக்களுடன் 7-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மயூர ...யின் கருத்தையும் ஒப்பாய்வு செய்து வெளியிட்டுள்ளார் ...ாலின் பதிப்பாசிரியர். இதனால் நமது முன்னோர்கள் ...யல் துறையில்' சிறந்த அறிவுபெற்றவர்கள் என்பதும் ...வாயிலாகப் புலப்படும்: இது ஆய்வாளர்களுக்குப் ...தும் உ...பெரியும் என்று நம்புகிறேன்.

இந்நூலை வெளியிட விரும்பி, பதிப்புப் பணியை இந் நூலக வடமொழிப் பண்டிதர் திரு. என். சீனிவாசன் அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டது. இவர் தனது பணியை சிறப்பாக நிறைவேற்றியுள்ளார். பண்டிதர் திரு. என். சீனிவாசன் அவர்களுக்கு எனது பாராட்டுக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன். சிறந்த முறையில் இந்தநூலை நுண்ணாய்வு செய்த வடமொழி அறிஞர் திரு. சுவாமிநாத ஆத்ரேயர் அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் வெளிவர ஏனைய பணிகளை நிறைவேற்றிய நூலக நிருவாக அலுவலர் திரு. என். தியாகராஜன், எம். ஏ., பி. எல்., அவர்களுக்கும், வெளியீட்டு மேலாளர் திரு. அ. பஞ்சநாதன், எம். ஏ., எம். எல். ஐ. எஸ்., அவர் களுக்கும், நூலக அச்சகப் பணியாளர்களுக்கும் எனது பாராட்டுக்கள்.

இந்த நூலகத்தை செவ்வனே பராமரித்துவரும் மாண்புமிகு முதல்வர் அவர்களுக்கும், மாண்புமிகு கல்வித்துறை அமைச்சர் அவர்களுக்கும், கல்வித்துறைச் செயலாளர் திரு. எம். ஏ. கௌரிசங்கர், இ. ஆ. ப. அவர் களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்த நூல் வெளிவரப் பொருளுதவி புரிந்த "மைய அரசுக்கு" எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்த நூலக வெளியீடுகளை வாங்கிப் படித்துப் பயன் படும் வாசகர்கள், ஆராய்ச்சியாளர்கள், மாணவர்கள் ஆகியோருக்கு இந்த 'சூரிய சதகம்' பெரிதும் துணைபுரியும் என்று கருதுகிறேன்.

**து. நா. இராமநாதன்,** இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சியர் மற்றும் இயக்குநர்,
சரசுவதி மஹால் நூலகம்

*தஞ்சாவூர்,*
*17—10—1998*

# முன்னுரை



இவ்வுலகில் தோன்றிய அனைத்து உயிரினங்களும் நலமுடன் வாழவும், ஆரோக்யமாக வாழவும் உதவி செய்வது சூரியனே. சூரியனின்றி உலகில் எதுவும் நடைபெறாது என்று இன்றைய விஞ்ஞானிகளும் கூறுகின்றனர். இதன் காரணமாகவே உலகில் பல நாடுகளிலும் சூரியனை தெய்வமாகவே கொண்டாடி வருகின்றனர். இத்தகைய சூரியனை வழிபடும் தோத்திர நூலாகவும், காவியமாகவும் அமைந்ததே 'சூர்ய சதகம்' எனப்படும் இந்த நூலாகும்.

இந்த அழகிய நூலுக்குத் 'தமிழில் உரை' எழுதினால் பலருக்கும் பயனளிக்கும் என்று கருதினேன். இதன் காரணமாக இந்நூலகத்தில் காணப்படும் ஸம்ஸ்கிருத உரை சுவடியை ஆராய்ந்தபோது, இவ்வுரை இதுவரை அச்சாகவில்லை என்பதை அறிந்து ஸம்ஸ்கிருத உரையுடன் தமிழ் உரையும் அமைவது பொருத்தமாக இருக்கும் என்று கருதி எனது விருப்பத்தை இந்நூலக நிர்வாகத்திடம் தெரிவித்தபோது; எனது விருப்பத்தை நிறைவேற்ற அனுமதியளித்தனர்.

இந்த நூலைப் பதிப்பிக்கும் பணியை எனக்கு நல்கிய நூலக நிர்வாக இயக்குநரும் மாவட்ட ஆட்சியருமான உயர்திரு. து. நா. இராமநாதன், இ. ஆ. ப., அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூல் விரைவில் அச்சிடுவதற்கு உதவிபுரிந்த இந்த நூலக நிருவாக அலுவலர் திரு. N. தியாகராஜன், M. A., B. L., அவர்களுக்கும். பதிப்புத்துதுறை மேலாளர் திரு. அ. பஞ்சநாதன், M. A., M. L. I. S., அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்த நூலைப் பதிப்பிக்க எடுத்துக்கொண்டபோது உரைச்சுவடியில் காணப்பெறும் பல ஐயங்களையும் நீக்கி, எனக்குத் தெளிவுகொடுத்தவர் திரு. பு. ம. பத்மநாப சர்மா அவர்கள். இவருடைய பழுத்த அனுபவம் எனக்கு மிகவும் பயனளித்தது. அன்னார் அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்த "சூரிய சதகத்திற்கு" நுண்ணாய்வு செய்தவர் திரு. ஸ்வாமிநாத ஆத்ரேயர் அவர்கள். இவர் தமிழ்ச் சிறுகதை எழுத்தாளர்களின் முன்னோடியாவார். இவர் ஸம்ஸ்க்ருதத்தில் எழுதிய நாடகங்கள், காவியங்கள், மொழிபெயர்ப்புக்கள், சிறு கதைகள், கட்டுரைகள் பல மதிப்புமிக்க பத்திரிகைகளில் வெளிவந்திருக்கின்றன. இந்த நூலகத்தின் சிறப்புக் கேண்மைப் பதிப்பாசிரியருமாவார். இந்நூலை தக்கபடி நுண்ணாய்வைச் சிறப்பாகச் செய்து கொடுத்த திரு. ஸ்வாமிநாத ஆத்ரேயர் அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூலுக்கு பாடபேதம் பார்க்கும்போது என்னுடன் சுவடியைப் படித்து உதவி புரிந்த இந்நூலக ஸம்ஸ்கிருத பண்டிதர் சிரஞ்ஜீவி அ. வீரராகவன் அவர்கள். அன்னாருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள் கிறேன்.

## ॥ फलश्रुतिः ॥

प्राचीमुखैकतिलकं
पूर्वाचलशेखरैकमाणिक्यम् ।
त्रिभुवनगृहैकदीपं
वन्दे लोकैकलोचनं देवम् ॥

श्लोकानां लोकभूत्यै शतमिति रचितं श्रीमयूरेण भक्त्या-
युक्तश्चेदं पठेद्यत्सकृदपि पुरुषः सर्वपापैर्विमुक्तः ।
आरोग्यं सत्कवित्वं मतिमतुलबलं कान्तिमायुः प्रकर्षं
[1]भुक्तिं मुक्तिं च शक्तिं सुखमभिलभते सोऽत्र सूर्यप्रसादात् ॥

## பலச்ருதி:

*ப்ராசீ முகைகதிலகம்*
*பூர்வாசலசேகரைக மாணிக்யம் ।*
*த்ரிபுவந க்ருஹைகதீபம்*
*வந்தே லோகைக லோசநம் தேவம் ॥*

*ச்லோகாநாம் லோகபூத்யை*
*சதமிதிரசிதம் ஸ்ரீ மயூரேண பக்த்யா-*
*யுக்தச்சேதம் படேத்யத் ஸக்ருதபி புருஷ:*
*ஸர்வ பாபைர் விமுக்த: ।*
*ஆரோக்யம் ஸத்கவித்வம் மதிம் அதுலபலம்*
*காந்திமாயு: ப்ரகர்ஷம்*
*புக்திம் முக்திம் ச சக்திம்*
*ஸுகமபிலபதே ஸோ(அ)த்ர ஸூர்யப்ரஸாதாத் ॥*

---

1. विद्यामैश्वर्यमर्यं सुतमपि लभते सोऽत्र सूर्यप्रसादात् ॥

## நூற்பயன்

உலக நன்மைக்காக மயூர கவியினால் இயற்றப்பெற்ற இந்த 'சூரிய சதகம்' என்னும் ஸ்தோத்திரத்தை ஒருமுறையாவது பக்தியுடன் பாராயணம் செய்பவன் அனைத்துப் பாவங்களிலிருந்தும் விடுபடுகிறான். மேலும், ஆரோக்யம், கவிதாசக்தி, நல்லறிவு, ஒப்பற்ற வலிமை, ஒளி பொருந்திய உடல், நீண்ட ஆயுள், சகல வித்தைகள், ஆளுமை, செல்வம், புத்திரப்பேறு போன்ற சகல நன்மைகளையும், சூரியனுடைய அருளால் அடைவான்.

॥ श्रीभवानीशङ्करार्पणमस्तु ॥

॥ श्रीवेङ्कटेशप्रसन्नः ॥



சிறப்பாக இந்த நூல் வெளிவர என்னுடன் உழைத்த இந்நூலக அச்சகப்பிரிவு நண்பர்களுக்கு எனது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

வாசகர்களும், ஆய்வாளர்களும் இந்த நூலைப் படித்து இறையருளை பெற விரும்புகிறேன். இதில் காணும் குறைகளைப் பற்றி எனக்கு எழுதினால் அடுத்த பதிப்பு வெளிவரும்போது திருந்திய பதிப்பாக வெளிவர அது உதவியாக இருக்கும்.

**N. ஸ்ரீநிவாஸன்,**
ஸம்ஸ்க்ருத பண்டிதர்.
சரசுவதி மகால் நூலகம்.

*தஞ்சாவூர்*
*18—9—98*



# வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள், அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும், பனையோலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை, பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப் புகழை, பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம் பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே, "நாம் பெற்ற பேறு பெறுக இவ் வையகம்" என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

*தஞ்சாவூர்,*
*23-10-98*

**மாவட்ட ஆட்சியர் மற்றும் இயக்குநர்,**
***சரசுவதி மகால் நூலகம்.***

# நூன்முகம்

தெய்வங்கள் பற்றி சம்ஸ்கிருத மொழியில் வந்துள்ள இலக்கியங்கள் ஏராளம். வேறு எந்த நாட்டிலும் இத்தனைத் துதிப்பாடல்களை நாம் காணவியலாது.

அங்ஙனம் தோன்றியுள்ள 'தோத்திர இலக்கியங்களில்' "கடவுளே உன்னைப் போற்றுகின்றேன். என்னைக் காப்பாற்று" என்ற முறையில் புனையப்பட்டவைதாம் பெரும்பாலும் உள்ளன. கவிநயமும், கருத்தாழமும் கொண்ட நூல்கள் சில நூறு நூல்கள்தாம் கிடைக்கின்றன. அவற்றிலெல்லாம் பொதுவாக ஆதார சுருதியாக அமைந்த கருத்து ஒன்றுண்டு.

'பரம்பொருள் என்ற ஒன்று, என்றுமே உள்ளது. அது இல்லாத நேரமோ, இடமோ கிடையாது அதற்கு உருவமே கிடையாது. அது சர்வ வல்லமை பெற்றது. எல்லாம் அறிந்தது. அறிவே அதன் வடிவம். அது தானாக இயங்கி உலகமாக விரிந்தது. எங்கும் ஊடுருவி நிற்கிறது. ஆயினும் உலகில் ஒட்டாதது. அதன் சக்தி உலக இயக்கத்தை ஒரு நெறியோடு (Rhythm) ஆட்டிப் படைக்கிறது. அருவமான (அரூபமான) அந்த சக்தி பல சக்திகளாக விரிகிறது' என்று.

உதாரணமாக, 'மின்சாரம்' என்பது பொதுவான தொரு 'சக்தி'. அது பல்பில் (Bulb) ஒளியாக விளங்கு கிறது. மின் விசிறியின் வாயிலாகக் காற்றை வீசுகிறது. இயந்திரத்தின் அமைப்புக்கு ஏற்றவாறு விசையாகிப் பற்பல வேலைகளைச் செய்கிறது. சில இயந்திரங்களில்—மிகப் பெரியவைகளில்—அதன் சக்தி அதிகம் உண்டு. சில நுண்ணிய அமைப்புக்களில் கூட அதிக சக்தியும் உண்டு. சில பெரிய அமைப்புக்களில் சக்தி குறைந்தும் செயல்படு கிறது. 'மின்சாரம்' என்ற ஒரே 'சக்தி' இவ்விதம் பலவாறு

செயல்படுவதைப் போல பரம்பொருள் பல நிலைகளில், பல சக்திகளாக மலர்ந்து, பல சாதனைகளைப் புரிந்து, ப்ரபஞ்ச ஓட்டத்தைச் செவ்வனே நடத்திச் செல்கிறது. இந்த சக்தியைத்தான் தெய்வம் என்கிறோம், இப்படி நம் முன்னோர்கள், பரம்பொருளின் சக்தியை பல்வேறு வகைப் பட்ட தெய்வ வடிவங்களாக, தமது யோக பலத்தினாலும், தபோ பலத்தினாலும், ஆத்ம பலத்தினாலும், அருவத்தை (அரூபத்தை) உருவகப் படுத்தினார்கள். இக்கருத்தையே மாணிக்கவாசக ஸ்வாமிகள் திருவாசகத்தில் "ஒரு நாமம் ஓருருவம் ஒன்றுமில்லாற் காயிரந்திருநாமம் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ" என்று தமிழில் பாடியுள்ளது சிந்திக்கத்தக்கது

நமது புலன்களுக்கு அகப்படுகின்ற (ஐம்பூதங்களின் சேர்க்கையான) பல வடிவங்களிலுள்ள அதே தெய்வசக்தி இயங்கி அருள் பாலிக்கிறது. பௌதிகமாக நமது புலன்களுக்கு அகப்படுகின்ற வடிவங்களிலும் பரம்பொருள் பரவி நிற்கிறது.

இப்படிப்பட்ட பௌதிக வடிவங்களிலேயொன்று தான் சூரியன். சூரியன் என்றபோது ஒன்பது கோள்களில் ஒன்றாக அன்றாடம் காலையில் உதித்து மாலையில் மறைகின்ற ஒளிக்கோளத்தைத்தான் நாம் பார்க்கிறோம். ஆனால் அந்த ஒளிக்கோளத்திற்கு அளவற்ற சக்தியை அருளுகின்ற அதே சமயம் அதற்கும் அப்பாற்பட்ட பரம்பொருள்தான் 'சூரியன் என்ற தெய்வம்' (அரூபமான) உருவமற்ற பரம்பொருளை உருவமான சூரியனுடைய கோளில் (பிம்பத்தில்) தெய்வமாக பாவித்து வழிபடுகிறோம் என்பதுதான் உண்மை.

இதைப் பற்றி விரிவாகப் பேசுகின்ற வேதங்கள்; ஜ்யோதிர் மண்டலம் என்னும், ப்ரமாண்டமாக, ஐம்பூதத் தொகுப்பாக, நாம் காணுகின்ற பிரபஞ்சத்தை மஹாமேரு பர்வதம் நிலைகுலையாமல் தாங்குகிறது என்றும், அதைச்

சுற்றி சூரிய மண்டலம் வலம் வருகிறது என்றும், நமது சிற்றறிவுக்குப் புலப்படும்படியான வகையில் விளக்கு கின்றன. இந்த விளக்கங்களைப் பௌதிகமாக நாம் காண்கின்ற உலகியலுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் இவை பொருந்தாதுதான்.

பௌதிக, ரசாயன ஆராய்ச்சிகளில் நமக்குக் காட்டப் படுகின்ற வரிவடிவங்கள் (Diagrams) நமக்குப் புரிய வைப்பதற்காக வரையப்பட்ட கற்பனைகளே தவிர, அப்படித்தான் அவற்றின் அமைப்பு என்று யாரும் கருதுவ தில்லையே!

ஆனால் ஒன்று — பௌதிகமாக நமக்குத் தெரிகின்ற சூரிய மண்டலத்தை ஆட்சி செய்கின்ற–உருவமற்ற–தெய்வ சக்தியை–ஒரு வடிவத்திற்கு உட்படுத்தி, அதற்குரிய அலங்காரங்கள், ஆயுதங்கள், வாஹனங்கள், அது பவனி வருகின்ற மாட்சிமை, இவற்றை வர்ணிக்கின்ற பாங்கிலே, அந்தத் தெய்வ வடிவம் நமது உள்ளங்களில் பதிந்து, பௌதிக உருவிலேயே காணப்படும் கோளத்திலே அந்த தெய்வ வடிவைத் தியானிப்பதன்மூலம் நமது உள்ளம் பரம்பொருளுடன் தொடர்புகொள்கிறது; பரம்பொருளின் அருளைப் பெறுகிறது என்பதே இந்த பாரத நாட்டின் பண்டைய இலக்கியங்கள் காட்டுகின்ற தத்துவ இயல்.

இந்த முறையிலே சூரிய வழிபாடு, வேதங்கள் காட்டிய வழியிலேயே நமது முன்னோர்களால் கடைபிடிக்கப்பட்டு வந்திருக்கிறது.

பௌதிகமான சூரிய மண்டலத்தின் ஒளிக்கதிர்கள் உலகியல் ரீதியாக நீரை ஈர்த்து, மேகங்களில் சேமித்து, மழை பொழியவைக்கின்றன. பயிர் பச்சைகளுக்கு உயிரூட்டி, வலுவூட்டி வளர்க்கின்றன. "அதன் தெய்வீக சக்தி, மனிதனின் பிர்ம்மரந்திரத்தின் வழியாக இதயநாடி களை உயிர்த்துடிப்புடன் வாழச் செய்கின்றன. யோகப்

பயிற்சியில் முனைந்தவன் ஸுஷும்னா நாடியில் நுழைந்த கதிர்களின் வழியே தன் ஆத்மாவைச் செலுத்தி பிர்மத்துடன் ஒன்றிவிடுகிறான்'' என்று உபநிடதங்கள் கூறுகின்றன. இப்படி பௌதிகமான சூரியனே, தெய்வீக மான சூர்யநாராயணனாக, ப்ரத்யட்ச தெய்வமாக, பாரத மக்களின் உள்ளுணர்விலே ஊறிவிட்டான். எழுத்தறிவு இல்லாத நாட்டுப்புறத்துப் பாமர மக்கள்கூட, காலையில் எழுந்ததும், வாசலில் வந்து கிழக்கு நோக்கி நின்று. சூரியனைப் பார்த்துக் கைகூப்பி வணங்கும் காட்சியை இன்றும் நாம் பார்க்கமுடிகிறது.

ஒளியின் தெய்வம் சூரியன். கண் பார்வைக்கு ஒளி தேவை. ''கண் கெட்ட பிறகு சூரிய நமஸ்காரம் எதற்கு?'' என்று கேட்பார்கள் மக்கள். இதிலிருந்து அறிவது; கண்ணொளி மங்காமல் இருப்பதற்கு சூரியனை வழிபட வேண்டுமென்பதுவே. இது பாரத நாட்டுப் பண்பும்கூட.

ஆனால், முன்னால் குறிப்பிட்டதுபோல சூரியன் பரம்பொருளின் ஒருவகை விரிவுதான் — என்ற அடிப்படை யில், ''சூரியனே பரம்பொருள்'' என்ற கருத்தை ஆதார சுருதியாக வைத்துப் புனையப்பட்டதே இந்த் "சூர்ய சதகம்". சூரியனின் தெய்வத் தன்மையைப் பல கோணங் களில் எடுத்துக்காட்டி, நம உள்ளங்களில் பதியவைக்கிறது இந்த ''சூர்ய சதகம்''. எத்தகைய அழகிய கற்பனைகள்! இயற்கையின் காட்சிகளில் தெய்வத் தன்மையைப் பதிய வைக்கின்றது ''சூர்ய சதகம்''.

## சூரியனைப்பற்றிய மயூர கவியின் கற்பனைகள்

சூரிய உதயத்திற்குமுன், இருள் கொஞ்சம் கொஞ்சமாக அகலும்போது. இருளில் கண்களுக்கு மறைந்திருந்த பொருட்களை இனம் கண்டுகொள்கிறோம். வானத்திலே செவ்வொளி படர்கிறது. சற்று நேரத்தில் சூரிய பிம்பம் தெரிகிறது. நீர் நிலைகளில் தாமரைகள் மலர்கின்றன. ஆங்காங்கு மனிதர்களும், பிராணிகளும், செயலூக்கம்

பெறுகின்றனர். இதுதானே அன்றாட நிகழ்ச்சி நிரல்? இந்தச் சாதாரண நிகழ்ச்சிகளே ரசிப்புத்தன்மையற்றவனைக்கூட ரசிக்கவைத்துவிடுமே! இத்தகைய காட்சிகளை காணுகின்றவன், ரசிகனாகவும், கவிஞனாகவும் அமைந்துவிட்டால் கேட்கவாவேண்டும்? இத்தகைய ரசிகராகவும், கவிஞராகவும் அமைந்துவிட்டவரே மயூரகவி. இவர் எத்தனை எத்தனை மாட்சிமைகளை நம் உள்ளங்களிலே பாய்ச்சுகின்றார். "எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா" — என்ற 'பாரதியின் பாடல் வரி' அவ்வளவும் உண்மை என்றல்லவா நிரூபிக்கின்றார் மயூரகவி. இவருடைய கற்பனைக் கவிதைகளிலிருந்து ஒருசில துளிகள்:

சூரியனின் கதிர்கள் நம் கண்களிலே பாயவில்லை. அதோ... அந்தக் குளத்திலே மொட்டுக்களாகத் தலைதூக்கி நிற்கின்ற தாமரைகள் மெல்ல மெல்ல இதழ்களை விரிக்கின்றன. இதோ பார், எங்கள் லக்ஷ்மியை! "தாயே வெளியே வா அம்மா! எல்லோரும் உன்னைக் கண்களால் காணட்டும்" ஏதோ இருட்டுக் குகையில் ஒளிந்திருந்துத் தடுமாறிக்கொண்டிருந்த பிரபஞ்சத்தை, வெளிக்கொணர்கின்றன. இந்தத் தளிர்போன்ற மெல்லிய கதிர்கள் என்று காட்டுகிறார் கவி (சுலோகம் — 2).

கதிர் ஒருபுறம் ஆங்கே ஓடையில் உள்ள தாமரையில். மறுபுறம் வெகுதூரத்திற்கப்பால் பெரிய மலையின் உச்சி முகட்டில் அவை முக்கோப்பு (M) கட்டுகள்போல ஊன்றி நிற்கின்றன. பாவம், சூரியன் அலைந்து அலைந்து கால்கள் (கடுக்கும்போது) வலிக்கும்போது கால்களை (கதிர்களை) அகட்டி நிற்கிறான்போலும் (சுலோகம் — 3). இருட்டுப் போர்வை மூடியதால், பிரபஞ்சம் மறைந்திருக்கிறது. சூரிய ஒளி பரவி அந்த மூட்டத்தைக் கிழித்தெரிகிறது. அதுமட்டுமல்ல, ஊடும் பாவுமாகப் பாய்ந்த சூரிய ஒளிக் கதிர்கள் ஒரு பொன்னாடையைப் புனைந்து பிரபஞ்சத்தின் மீது விசிறி பிரபஞ்சத்திற்கு அழகூட்டுகிறதாம். (சுலோ. 4)

அதோ சூரியனுடைய ரதம் தெரிகிறது. அது கீழ்த் திசையென்ற மங்கையின் நெற்றித் திலகம்போலத் திகழ்கின்றது. அந்த மங்கைக்கு ஆரத்தி எடுத்து மஞ்சள் நீரை வாரி இறைத்தாற்போல பளபளவென்று நீர்த்துளிகள் கதிர்களின் ஊடே தெரிகின்றது. சக்கரவாகப் பறவை தனது பிரிவுத்துயரத்தை நீக்கியதால், சூரியனுக்குத் தனது இமைக்காத கண்களால் நன்றியுடன் அர்ச்சிக்கின்றனவோ? (சுலோகம் 12)

அதோ சூரியனின் இளங்கதிர்கள் வெளிப்படுகின்றன. கைலாயத்தில் பரமேச்வரன் தன் முடியில் அணியாக விளங்கும் சந்திரகலை "பவுஷு" இழக்குமோ என்று கவலைப்படுகிறான். படைத்துக் களைத்துப்போன பிர்ம தேவன் இரவில் தனது இருக்கையான தாமரையிலேயே தூங்கிவிடுகிறான்போலும். தாமரையும் கூம்பிக்கொண்டு (மூடிக்கொண்டு)விட்டது. பிர்மதேவன் அதற்குள் ஒடுங்கிக் கிடக்கவேண்டியதாகிவிட்டது. பாவம்; எப்போது தாமரை மலரும்? என்று ஏங்கிக்கிடக்கிறான். அதோ சூரியனும் உதிக்கிறான். தாமரையும் மலர்கிறது. பிர்மதேவனோ அப்பாடா என்று தன் கால்களை அகட்டிப் போட்டுக் கொண்டு அமர்கிறான். இறைவன் ஸ்ரீகிருஷ்ணனுக்கு ஒரு பயம். அது என்ன தெரியுமா? ...... இருளுக்கு நிறம் கருப்பு. இந்தக் கருமையைப் போக்குகிறவன் சூரியன். தனது சியாமளமேனியின் கருமையையும் வெளிரச்செய்து விடுவானோ! என்ற பயம். கண்ணனுக்குத் தன் கருமையில் அவ்வளவு கர்வம். "சூரிய பகவானே! என் கருமையை அவமானப்படுத்திவிடாதே" என்று வேண்டுகிறானோ! (சுலோகம்—16)

சூரிய கிரணங்கள் முன்னே வெளிப்படுகின்றன. இன்னும் சூரிய(பிம்பம்)ன் வெளிப்படவில்லை. அதற்குள் இருள்போன இடம் தெரியவில்லை. (சூடு) சூரிய வெப்பம் இன்னும் பரவவில்லை. ஆங்காங்கே மரங்களும், மலைகளும் மங்கலாகத் தெரிகின்றன. ஆனால் அதற்குள்

மனிதன் அன்றைய கார்யங்களுக்குரிய திட்டம் போட்டு விட்டான். காரணம், சூரியனுடைய முன்னொளியினால் ஊக்கம் பெற்று அவையெல்லாம் நிறைவேறும் என்ற உற்சாகமும் பெறுவதே. (சுலோகம்—28)

ரத்தினங்கள் மக்களின் அலைகளிலே இடம்பெற்று அங்கு மட்டும் ஒளிர்கின்றன. நெருப்பு எரிகிறதே தவிர ஒளிதரவில்லை. சில்லென்று சந்திரன் குளிர்ச்சியை அளித்து மகிழ்வைத் தருகிறானே தவிர ஒளிதரவில்லை. ஆனால் சூரிய கிரணங்களோ ஒளியும் தந்து, உற்சாகமும் தந்து, உற்பத்திப் பெருக்கத்திற்கும் அதிக அளவில் உதவி புரிகின்றது. (சுலோகம்—30)

சூரிய உதயத்திற்குமுன், வானிலே செவ்வொளி படர்கிறது. இதுதான் நாம் பௌதிகமாகக் காணும் காட்சி. இதை தெய்வீகமாகக் காட்டுகிறார் கவி. சூரியனுக்கு, ஏழு குதிரைகள் பூட்டிய ரதம். அதற்கு ஒரு சாரதி. அவனுக்கு அருணன் என்று பெயர். (அருணம் — சிவப்பு; சிவப்பு நிறத்தைப் பெற்றமையால் அருணன் எனப்படுகிறான்).

கச்யபர் என்றொரு முனிவர். அவர் தனது யோக சக்தியினால் சூரியனிடம் வியாபித்துள்ள பரம்பொருளின் தன்மை; சக்தி; அது உலகியலிலே கோள்களின் தலைவனாகச் சாதிக்கும் சாதனைகள் ஆகிய அனைத்தை யும் கண்டறிந்து விளக்கம் கொடுத்தார் கச்யப முனிவர். அதை வேதம் கூறும்போது, **"कश्यप: पश्यको भवति। यत्सर्वं परिपश्यतीति सौक्ष्म्यात्।** (கச்யப: பச்யகோ பவதி। யத்ஸர்வம் பரிபச்யதீதி ஸௌக்ஷ்ம்யாத்।)

இம்முனிவருக்கு அதிதி என்ற பெயருடன் மனைவி ஒருத்தி. தெய்வீகமான-சூரியனான பரம்பொருள்-பௌதீக மான சூரியனாக அவர்களுக்குப் பிள்ளையாகப் பிறந்தான். சில குழந்தைகள் தன் தந்தையின் தோற்றத்துடன்

பிறக்கும். சில குழந்தைகள் தாயின் தோற்றத்தையே அச்சாகக் கொண்டு பிறக்கும். இப்படி தனது தாய் அதிதியின் தோற்றப் பொலிவைக்கொண்டு பிறந்த பிள்ளையாதலால் அவனுக்கு ஆதித்தியன் என்றே பெயர். (அதிதிக்கு இன்னும் பல பிள்ளைகளுண்டு. அவர்களுக்கு ஆதித்தியர் என்ற பெயர் கிடையாது. இதையும் கவி பின்னால் 90 ஆம் சுலோகத்தில் கூறுகிறார்.)

இந்த கச்யப முனிவருக்கு "விநதை" என்ற மற்றொரு மனைவி. இவளுக்கு இரண்டு பிள்ளைகள், மூத்தவன் அருணன், இளையவன் கருடன். அருணனுக்கு இடுப்புக்குக் கீழே உடல் ஊனம். அத்தனைக்கத்தனை அருணனுக்கு உடலின் மேல்பகுதியில் வீர்யம் — தேஜஸ் — அதிகம், சூரியனுக்கு ஒரு தேரோட்டி தேவை. எவனும் சூரியனை அணுகமுடியவில்லை. அருணனின் தேஜஸ், சூரியனின் தேஜஸுக்கு ஈடுகொடுக்கும் என்று கண்டு, கச்யபர் சூரியனுக்குத் தேரோட்டியாக அருணனை அமர்த்தினார்.

மின் கதிர்களைப் பாய்ச்சி இரும்பில் துளை போடுவார்கள். அந்தத் துளைபோடும் தொழிலாளி (Welder) தனது கண்களைத் தாக்காதவாறு கேடயம் போன்றதொரு சாதனத்தைத் (Cooling glass) தம் கண்களுக்கு முன்னே பிடித்துக்கொண்டே இப்பணியைச் செய்வான். சில சமயங்களில் அந்தக் கேடயம் போன்ற சாதனமும் மின்சார வெப்பத்தில் சிவந்துவிடும், அதுபோல உதயசூரியனை நமது இயற்கைக் கண்களால் அதிகாலையில் காணும் போது—நமது கண்கள் கூசாவண்ணம்—ஒரு செவ்வொளி வட்டம் மறைந்து நிற்கிறதே, அதுதான் அருணனான, சூரிய ரதத்தின் தேரோட்டி. அந்த அருணனை நமக்கு அறிமுகம் செய்துவைக்கிறார் கவி.

"உதயகிரி" என்ற நாடக மேடை—அது இருள் என்ற திரையால் மூடப்பட்டிருக்கிறது. நாடகம் தொடங்கும் போது அத்திரை விலக்கப்படுகிறது. திரைக்குப் பின்னால்

இருந்து புஷ்பாஞ்சலி. மேடை மீது மலர்கள் தூவப்படு கின்றன. மறையப் போகும் நட்சத்திரங்களே அந்த மலர்கள். அந்த நாடக மேடையில் சூரியன் உதிப்பது; ஆகாயத்தில் பரவுவது; மேற்திசையில் சாய்வது; அஸ்தமனம் ஆவது; என்ற நான்கு காட்சிகள் கொண்ட நாடகத்தை நடிக்கப் போகிறான். அவனுக்குக் கட்டியம் கூறிக்கொண்டு இதோ நாடகத்தின் சூத்ரதாரனான அருணன் வருகிறான் என்கிறார் கவி. (சுலோ - 50)

இந்த அருணன் இப்போதுதான் சந்திரனுடைய சில்லென்ற அமுத கிரணங்களை, கொஞ்சம் அதிகமாகவே குடித்துவிட்டான். இதனால் அருணனின் உடலே சில்லிட்டு விட்டது. இதன் காரணமாக அவன் ஒரு 'கணப்பு' (குளிர் காய) மூட்டிக் கொள்கிறான் குளிர் காய்வதற்காக. அந்தக் கணப்புத்தான் சூரிய கதிர்கள். அவன் மார்புக்கு (முன் புறம்) சுரணை பெற்றுவிட்டது. ஆனால் முதுகு இன்னமும் சில்லென்றுள்ளது. இத்துடன் ரதத்திலும் ஏறிவிட்டான். பின்புறம் 'சூரியன் உதிக்கும்போதே அருணனுடைய முதுகின் சில்லிப்பைப் போக்கிவிடுகிறான். (சுலோ - 52) என்பதை உலகியல் நிகழ்ச்சிகளுடன் ஒப்பிட்டுக் காட்டு கிறார் கவி.

உதய காலத்தில் சூரியனை வழிபடுவதற்காக இந்திராதி தேவர்கள் காத்திருக்கின்றனர். காத்திருக்கும் தேவர்களை அருணன் விசாரிக்கின்றான். ஓ இந்திரனா ? உமக்கு ஆயிரம் தாமரைக் கண்களா ? அத்தனையும் மலர்ந்து விட்டனவே ! ஹே அக்நி தேவரே ! என்ன, பளீரென்று கண்களில் படமாட்டீரோ ? ஓஹோ ! சூரிய பகவானின் ஒளிக் கதிர்களின் முன்னே உம்முடைய ஒளி மங்கிவிட்டதோ ! யமதர்மராஜனா ! என்ன அய்யா எருமை வாகனத்தில் ஏறிக்கொண்டு வழி நடுவே நிற்கிறீர் ! உமது தந்தை சூரிய தேவன் பவனி வருகிறார். நடுவீதியில் வழி மறைத்திருக்கிறீரே ! உமது வாகனத்தை அப்புறப் படுத்துங்கள். என்ன ! தென்மேற்கு மூலையில் ஒதுங்கி

நிற்கிறீர்கள்? நீங்கள் ராக்ஷஸர்கள் தானே! சூரிய பகவான் உங்களைப் பார்த்துவிட்டார். வருணதேவனா! வாருமையா! இந்தக் குதிரைகள் ஓடிக்கொண்டிருக்கும் போதே சற்று குளிப்பாட்டுமையா; ஓஹோ! வாயுதேவனா? எங்கே! இந்தக் குதிரை வேகத்திற்கு ஈடாக ஓடிவாரும் பார்க்கலாம். குபேரனா? உங்களுடைய செல்வக் கஜானா நல்ல காவலில் உள்ளதா? தெரிவித்துவிடுகிறேன். அடடே! ஈசான தேவனா? தாங்களுமா காத்திருக்கவேண்டும்? அடியேனின் வணக்கத்தை ஏற்றுக்கொள்ளவேண்டும்" என்று எண்திசை அதிபர்களையும் விசாரிக்கிறானாம் அருணன். (சுலோகம்—59)

சூரியனுடைய ரதத்தில் ஏழு குதிரைகள் VIBGYOR என்ற ஏழு நிறங்களே அவை. இவ்வண்ணங்களே ஏழு குதிரைகளாக உருவகப்படுத்தப்பட்டுள்ளன என்று கூறுவதுண்டு. ஆனால் அவையெல்லாம் பச்சை நிறமுடையவை என்கிறார் மயூரகவி, (சுலோ. — 46, 47, 60)

மேரு பர்வதத்தின் தாழ்வரையில் இருபுறமும் சுவர்களாகப் படிகப் பாறைகள் நிற்கின்றன. அந்தப் பாதையில் குதிரைகள் செல்கின்றன. அவற்றின் பிரதி பிம்பங்கள் இருபுறமும் சுவற்றில் தெரிகின்றன. 'அவை வேறு குதிரைகள், அவற்றை நாம் விஞ்சவேண்டும்' என்ற வேகத்துடன் குதிரைகள் பாய்கின்றன. மறுபுறத்தில் 'பதுமராகப் பாறைகள்' சுவர்களாக நிற்கின்றன, அவற்றிலே சூரிய ஒளிபரவி வழியெல்லாம் செக்கச்செவேலென்று ஒளிர்கிறது. அதனை மாலை வெய்யில் என நினைத்து, 'எல்லையை அடைந்துவிட்டோம்' என்ற பிரமையில் குதிரைகள் மெல்ல மெல்ல நடைபோடுகின்றன. அதற்குமப்பால் 'மரகதப் பாறைகள்' பச்சைப் பசேலென்று சுவர் வைத்திருக்கின்றன. சுவற்றின் நிறத்தோடு ஒன்றிவிட்ட குதிரைகள் கண்களுக்குப் புலப்படவே இல்லை. ஆனாலும், அவை வழிச் சுவடு மாறுவதில்லை. அன்றாடம் போகின்ற வழிதானே. (சுலோகம்—46)

குதிரைகள் போகின்ற வழியில் தேவர்கள் நின்று வணங்குகிறார்கள். அப்பால் சில குகைகளில் வசிக்கின்ற கின்னரீகள் (குதிரை முகத்தவர்) ஓடிவந்து சூரியனின் குதிரைகளைப் பார்க்கின்றனர். அந்த கின்னரீகளின் முக அழகில் சொக்கிப்போன ரதக்குதிரைகள், வேகம் குறைந்து சற்றுப் பின்னால் திரும்பிப் பார்க்கின்றன. அருணசாரதி சாட்டையைச் சொடுக்குகிறார். ஆயினும் குதிரைகள் தடை தளர்ந்து சற்றுத் திரும்பி கின்னரீகளைப் பார்த்துக் கனைக்கின்றனவாம். (சுலோ. — 48)

சூரிய ரதம் ஆகாய வீதியில் ஒரே நாளில் பூமண்டலத்தைச் சுற்றவேண்டுமே! அதன் வேகத்தில் ரதம் சில சமயம் தரை தட்டுகிறது. அப்போது வழியில் கிடக்கும் மிகப் பெரிய ரத்தினங்களைத் தேர்ச் சக்கரங்கள் பொடிசெய்து விடுகின்றன. அதனால் அந்த ரதம் மிகவும் பளுவுள்ளதாகத் தான் இருக்கவேண்டும் என்று தோன்றுகிறது. சில சமயம் தரை தட்டாமலேயே பறக்கின்றது. அப்போது மேருவின் உச்சிக்கு மேலேகூட ரதம் பறக்கும். அல்லது அஸ்தமன பர்வதத்தின் அடிவரையில்கூடப் பறக்கும். சூரிய ரதம் அவ்வளவு லேசானதா? ஒன்றும் புரியவில்லையே. (சு. 65)

பரம்பொருளான ப்ரம்ஹம் பிரபஞ்சமாக விரிந்த போது பிர்ம்மதேவனை பிரபஞ்சத்தைத் தொடர்ந்து படைத்துக்கொண்டே இருக்கவேண்டுமென்றும்; மஹா விஷ்ணுவை உலகைத் தொடர்ந்து காத்துக்கொண்டே இருக்கவேண்டுமென்றும்; பரமேச்வரனைத் தொடர்ந்து பிரபஞ்சத்திற்கு உபயோகமற்றவைகளை, தனக்குள்ளே அடக்கிக்கொள்ளவேண்டுமென்றும் நியமித்தது. ஆனால் சூரியன் மும்மூர்த்திகளுடைய கடமைகளைத், தானே ஒருவராக நிறைவேற்ற முனைந்துவிட்டார். அவ்வளவு தான், தேவியைவிட்டுக் கணநேரமும் பிரிந்து இருக்கக் கூடாது என்று தன் உடலில் பாதியாகவே ஆக்கிக்கொண்டு கைலாசத்தில் ரமிக்கிறார் சிவபெருமான். கொஞ்சம்கூடத் தயக்கமில்லாமல் மஹாவிஷ்ணு பாற்கடலில் களைத்துப்

போய் சேஷசயனத்தில் ஒய்யாரமாகப் படுத்துககொண்டு விட்டார். பிர்ம்மதேவனோ தாமரைமலரில் அமர்த்து ஜீவனையும், உடலையும் சேர்க்கின்ற யோகமாகிய படைப்பை யோகாப்யாசமாகவே ஆக்கிக்கொண்டு நாள் முழுதும் நிம்மதியாக இருக்கிறார். (சுலோ. — 88)

ஒரு கணம்கூட நிலைகொள்ளாது அலைந்துகொண்டே இருக்கும் நமது உள்ளங்களாகிய மான்களை, சூரியதேவன் என்ற முளையில் கட்டி, அவற்றின் சிந்தனை ஓட்டங்களை சூரியனையே சுற்றிச் சுற்றி வருமாறு பலவித காட்சிகளை எடுத்துக்காட்டி சூரியதேவனுடன் நமது உள்ளங்களைப் பிணைத்துவிடுகிறார் மயூரகவி.

**சூரியசதகத்தில் காணப்படும் விஞ்ஞானக் கருத்துக்கள் :**

## 1. சூரியனைச் சுற்றி வாயுமண்டலம்

விஞ்ஞானிகளின் கருத்து ;— சூரியனின் ஒளிக்கதிர், **"நிறமண்டலத்தை"** (Chormosphere)க் கடந்தே நமக்கு வருகிறது. இந்த நிறமண்டலம் 'ஹைட்ரஜன்', 'ஹீலியம்' போன்ற வாயுக்களால் ஆன பகுதியாகும். இவ்வாயுக்கள் சூரிய ஒளிமண்டலத்தைச் சுற்றிப் பல ஆயிரக்கணக்கான மைல்கள் பரவியுள்ளன. மேலும், சூரிய "ஒளிமண்டலம்" என்றதொரு பகுதி சூரியனைச் சுற்றியுள்ளது. இது சூரியனைச் சுற்றியுள்ள ஒளிர்வுமிக்க வட்டம் போலத் தெரியும் பகுதியே இதனை Photosphere என்று விஞ்ஞானிகள் அழைக்கின்றனர். இப்பகுதியே சூரியனின் அபரிமிதமான ஒளிக்கும், வெப்பத்திற்கும் காரணமாகும். இந்த ஒளிமண்டலத்தையடுத்து சூரியனின் வாயு மண்டலம் (Atmosphere) உள்ளது. இதுவும் கிட்டத்தட்ட ஒளிபுக விடும் வாயுக்களாலான ஒளிரும் பாகம்தான். இந்த வாயு மண்டலத்தை இரு பகுதிகளாகப் பிரிக்கலாம். ஒளி மண்டலத்தையடுத்த பகுதி, மற்றும் புவியிலுள்ள பல தனிமங்களின் ஆவியாலானது. இப்பகுதி சில நூறு

மைல்கள் வரையில் பரவியுள்ளது- இங்ஙனம் புவிக்கும் சூரியனுக்குமிடையில் பல்வேறு வகையான காற்று மண்டலங்கள் உள்ளன என்று நவீன விஞ்ஞானிகள் கூறுகின்றனர்.

இத்தகைய கருத்தையே மயூரகவியும் இந்நூலின் 63 ஆம் சுலோகத்தில் வெளிப்படுத்துகிறார்.

மயூரகவி கூறுவதாவது:— சூரியனுடைய தேர் மிக கனமானது. இது ஆகாயத்தில் செல்வதற்கான சுவடு கிடையாது—"வாயு மண்டலம்தான் உள்ளது. இந்த வாயு மண்டலம் ஏழு வகைப்படும். அவை முறையே ஆவஹ:, ப்ரவஹ:, விவஹ:, பராவஹ:, ஸம்வஹ:. உத்வஹ:. பரிவஹ: என்று அழைக்கப்படுகின்றன. இந்த வாயுக்களே ஒன்றன்பின் ஒன்றாக சூரிய ரதத்தை தங்கள் தோள்களில் சுமந்துகொண்டு செல்கின்றன" என்று குறிப்பிடுகிறார்.

இக்குறிப்பிலிருந்து சூரியனைச் சுற்றி பல்வேறு வகைப் பட்ட காற்று மண்டலங்கள் உள்ளன என்பதை மயூரகவி குறிப்பிட்டுள்ளது சிந்திக்கத்தக்கது,

## 2. சூரிய ஒளிக்கிரணங்கள் :

சூரிய ஒளிக்கிரணங்களைப்பற்றி மயூரகவி 3. 14, 30, 56. 98 ஆகிய சுலோகங்களில் குறிப்பிடும் செய்திகள் விஞ்ஞானிகளின் முடிவுகளுக்கு ஒத்ததாகக் காணப்படு கின்றன.

விஞ்ஞானிகளின் கருத்து: சூரியனின் ஒளிக்கதிர்கள் 'நிறமண்டலத்தை'க் கடந்தே புவிக்கு வருகின்றன. இதன் காரணமாக சூரிய ஒளியின் கிரணங்கள் 23,000க்கும் அதிக மான வரிகள் (lines) இருப்பதாகவும், இவை பூமியிலுள்ள தனிமங்களுடன் சேரும்போது, அக்கிரணங்கள் சூரிய நிறமாலையில் ஒன்றுக்கு 70 வரிகள் உண்டாகின்றன

என்றும் கண்டுபிடித்துள்ளனர். இவ்வரிகள் ஃபிரான்ஸ் ஹோப்பர் வரிகள் (Franshofer lines) எனப்படுகின்றன. அவை ஒவ்வொன்றும் சூரியனின் வளிமண்டலத்தில் காணப் படும் தனிமங்களைக் குறிப்பன. அந்தந்தத் தனிமத்தின் வெப்பநிலைக்கும், அடர்த்திக்கும் ஏற்ப அவ்வரிகள் அழுத்தம் (intensity), அகலம் (width) மாறுபடும் என்றும் கூறுகின்றனர்.

மேலும், சூரிய ஒளிக்கதிர்கள் நிறமாலையின் வழியாக வெளிப்படும்போது ஒவ்வொரு நிறத்திற்கும் வெவ்வேறு வகைப்பட்ட வெப்பங்களை அளிக்கின்றனவென்றும், இதில் சிவப்பு நிறமே அதிக வெப்பம் தரவல்லது என்றும், இதுவே அகச் சிவப்பு (Infra Red) க்கதிர்கள் என்றும் விஞ்ஞானிகள் கூறுகின்றனர்.

மயூரகவி : எந்த ஒளியின் வீச்சும் அகல அகல ஒளி குன்றும். ஆனால் சூரியனின் ஒளிக்கிரணங்கள் மட்டும் ஒளி குன்றுவதில்லை. சூரியன் உதிக்கும்போது சிறு சிறு வரிகளாக (கதிர்களாக) வெளிப்பட்டு, பின்னர் வானம் எங்கும் ஊடுருவிப் பாய்கின்றன. (சு - 7) சில கிரணங்கள் கடுமையானவை. சில கிரணங்கள் கடுமையற்றவை (சு. 29) சில கிரணங்கள் சுக்ரன் சந்திரன் போன்ற பிற கிரஹங் களின் ஒளியையும் குன்றச் செய்துவிடும் தன்மை பொருந்தியவை. சில கிரணங்கள் முழுமையானவை. சில கிரணங்களின் முன் முனையில் மட்டும் அதிக ஒளி உடையவை. சில கிரணங்கள் அதிகத் திறன் பெற்றவை. சில கிரணங்கள் சற்றே கடுமையானவை (சு. 98) என்று, ஒவ்வொரு கிரணத்தின் தன்மைகளைப் பற்றியும் கவி குறிப்பிட்டுள்ளது ஒப்பு நோக்கத் தக்கது.

## 3. சூரியன் உதிப்பதுமில்லை மறைவதுமில்லை :

**'சூரியன் உதிப்பதுமில்லை-மறைவதுமில்லை. பூமியின் சுழற்சியின் காரணமாகச் சூரியன் உதிப்பதுபோலவும்; மறைவதுபோலவும் காணப்படுகிறது' என்று இன்றைய**

நவீன அறிவியலார்கள் கூறுகின்ற கருத்தை 1700 ஆண்டுகளுக்கு முன்னரேயே மயூரகவி, தனது மயூரசதகம் 18, 97 ஆகிய சுலோகங்களில் குறிப்பிட்டுள்ளார். அவர் கூறும் செய்தியாவது :

உதயமோ, அஸ்தமனமோ இல்லாதவன் சூரியன். ஓரிடத்தில் இருந்துகொண்டே தன்னொளி பாயும் இடங்களிலெல்லாம் இருளைப்போக்கி அண்டப்பெருவெளி (Universe) எங்கும் பிரகாசித்து இருளையோட்டுகிறான். சூரிய ஒளியை விட்டு மறைந்த திசை இருளாகவும், சூரிய ஒளியுள்ள திசை பகலாகவும் காணப்படுகிறது (சு. 18). சூரியன் இந்த த்வீபத்தில் ஒளிவீசும்போது, மற்றொரு த்வீபத்தில் இருளாக இருக்கிறது. நக்ஷத்திரங்களுடன் குளிர்ந்த நிலவு சுடர்விட்டுப் பிரகாசிக்கும்போது மற்றொரு த்வீபத்தில் கடும் வெப்பம் பொருந்திய பகல் பொழுதாக இருக்கும் (சு. 97) என்பதையும் கவி சுட்டிக் காட்டியுள்ளது குறிப்பிடத்தக்கது.

## 4. விஞ்ஞானிகள் குறிப்பிடும் சூரிய மண்டலம்

வான வீதியில், சூரியன் தன்னைத்தானே சுற்றிவரும் பாதைக்கு 'சூரிய வீதி' என்று அழைக்கப்படுகிறது. இவ்வீதியில் சூரியன் ஒருமுறை தன்னைத்தானே சுற்றிக் கொள்வதற்குச் சுமார் 4 வாரங்கள் அதாவது 1 மாதமாகிறது. சூரியனையே மையமாக வைத்து புதன் (Mercury), சுக்ரன் (Venus) பூமி (Earth) செவ்வாய் (Mars), குரு (Jupiter), சனி (Saturn), யுரேனஸ் (Uranus), நெப்டியூன் (Neptune), புளூட்டோ (Pluto) ஆகிய கிரகங்களும், இந்த கிரகங்களின் உப கிரகங்களாக 28 கிரகங்களும்; தத்தமது பாதைகளில் சூரியனைச் சுற்றி வருகின்றன. (சந்திரன் பூமியின் உபக்ரஹம்) இவற்றில் பல சிறு கிரஹங்களும் (Asteroids), வால் நக்ஷத்திரங்களும் (Comets), எரி நக்ஷத்திரங்களும் (Meteors) அடங்கியதே சூரிய மண்டலம் என்பது விஞ்ஞானம்.

சூரியனுக்கு மிக மிக அருகில் உள்ள கிரஹம் புதன், இதைப்போல மிக மிகத் தொலைவில் உள்ள கிரஹம் புளூட்டோ. ஒவ்வொரு கிரஹங்களுக்குமிடையேயுள்ள தொலைவை விஞ்ஞானரீதியாகவே நம் முன்னோர்களும் கண்டுபிடித்துள்ளனர். மேலே கூறப்படும் கிரஹங்களில் பூமி, சந்திரன், செவ்வாய், வெள்ளி, வியாழன், சனி ஆகிய ஆறு கிரஹங்களைச் சாதாரணமாகவே கண்களால் காண முடியும். பிற கிரஹங்களைத் தொலைநோக்கி சாதனங்கள் வாயிலாகவே அறியலாகும்.

சூரியனைத் தவிர, மற்ற கிரகங்கள் யாவும் தாமாகவே ஒளிராப் பொருட்களாகும் என்றும் சூரியனிடமிருந்தே பிற கிரஹங்களும், உபகிரஹங்களும், நக்ஷத்திரங்களும், ஒளி பெற்றுப் பிரகாசிக்கின்றன என்பதும் விஞ்ஞானிகளின் கருத்தாகும். இக்கருத்தையே, மயூரகவியும் 96ஆம் சுலோகத்தில் குறிப்பிட்டுள்ளார். "சூரியனே உதிக்காவிட்டால் இந்த பிரபஞ்சமே இருள்மயமாக இருக்கும். இதனால் 'இன்னது' என்று புரியாமலும், தெளிவு பெறாமலும் இருக்கும். காரணம் அனைத்துக் கோள்களுக்கும் சூரியனே ஒளி கொடுப்பவன். சூரியனே ஒளி இழந்துவிட்டால் எங்குமே இருள்தானே!" என்பதைக் குறிப்பிடுகிறார்.

## 5. காலை - மாலைகளில் சூரியனின் வண்ணமும் உருவமும்

**மயூரகவியின் "சூரிய சதகத்தின்" தொடக்க சுலோகங்களில் கீழ்வானமும், சூரியனும் சிவந்திருப்பதைப் பற்றிய வர்ணனைகளைப் பல்வேறு கற்பனைச் சித்திரங்களாக வர்ணித்துள்ளார். இதற்குரிய விஞ்ஞானக் கருத்துக்கள் நூலில் காணப்படவில்லை. எனினும், சிவப்பு நிறத் தன்மை ஏற்படுவதை விஞ்ஞான ரீதியான காரணத்தை அறிவது பயனளிக்கும் என்பதால் அதனை கீழே குறிக்கப் பட்டுள்ளது.**

சூரியனை, நாம் சாதாரணக் கண்களால் காண முடியாது. ஆனாலும், சூரியோதயத்தின் போதும், அஸ்தமனத்தின் போதும் பெரிதாகவும், செம்மை வண்ண மாகவும் காணமுடிகிறது. இதற்குரிய காரணத்தை விஞ்ஞானிகள் விளக்கியுள்ளனர்.

சூரியனுடைய ஒளி பூமியைச் சுற்றியுள்ள வாயு மண்ட லத்தால் கிரகிக்கப்பட்டு, குறைந்த அளவாகவே சூரிய ஒளி நம்மை அடைகிறது. இதனால்தான் நாம் சூரியனை நேரிடையாகக் காணமுடிகிறது. மேலும்; வானம் நீல நிற மாகவும்; காலை-மாலைகளில் சூரியன் சிவப்பு நிறமாகவும் இருப்பதற்கான காரணத்தை ரேலி பிரபு (Lord Rayleigh) விளக்கியுள்ளார். மூலக்கூற்றளவுள்ள சிறுசிறு துகளின் மீது ஒளி படும்போது அந்த ஒளி சிதறிப்போகிறது. மஞ்சள், சிவப்பு நிறங்களைவிட நீல நிறம் மிகுதியாகச் சிதறுண்டு வானத்தை நீல நிறமாக்குகிறது. மஞ்சளும், சிவப்பும் அதிகமாகச் சிதறாமல் நம் கண்களையடைவதால் காலையிலும், மாலையிலும் சூரிய ஒளி சிவப்பாகக் காணப் படுகிறது. மேலும், காலை-மாலை வேளைகளில் சூரிய பிம்பம் பெரியதாகவும், உச்சி வேளைகளில் சிறியதாகவும் நம் கண்களுக்குத் தோன்றினாலும், அது சிறியதாக இல்லை. இதற்குக் காரணம் 'அடிவானத்திலுள்ள காற்று மேலேயுள்ள காற்றைவிட அதிக அழுத்தமும், அடர்த்தியும் உடையது. உதாரணமாக மூடுபனி (Fog), மறைபனி (Mist) ஊடாகக் காணப்படும் பொருள் பெரிதாகத் தோன்றுவதைப்போல் அடர்த்தியான காற்றினூடே காணப்படும் சூரிய பிம்பம் பெரிதாகத் தோன்றுகிறது' என்று விஞ்ஞானிகள் கூறுகின்றனர்.

## 6. சூரியனின் தேர்க்குதிரைகள்:

சூரியனுடைய தேர் ஒரு சக்கரத்தில்தான் இயங்குகின்றது என்றும், அத்தேருக்கு ஏழு குதிரைகள் உண்டு என்றும் (சு. 45) சூரிய சதகத்தில் காணப்படுகிறது. இந்தக் கருத்து புராணங்களிலும் காணப்படுவதுதான். அந்நாட்களில் தேர்களில் 8 குதிரைகளே பூட்டப்பட்டுவந்துள்ளன. இருப்பினும் 'சூரியனுக்கு ஏழு குதிரைகள்' என்று எண்ணிக்கையை ஏன் கொடுக்கவேண்டும்? எனில், 'ஒளியின்' ஏழு வண்ணங்களான ஊதா (Violet), கருநீலம் (Indigo), நீலம் (Blue), பச்சை (Green), மஞ்சள் (Yellow), ஆரஞ்சு (Orange), சிவப்பு (Red) ஆகியவையே குதிரைகளாக உருவப்படுத்தப்பட்டுள்ளன.

சூரியனுடைய வெண்மையான ஒளி இந்த ஏழு நிறங்களின் மொத்தக் கலவையே. இதில் நீலம், மஞ்சள், சிவப்பு ஆகிய மூன்று வண்ணங்களே, ஏனைய நான்கு வண்ணங்களை உருவாக்குகிறது ஆயினும் சிவப்பு, பச்சை, நீலம் ஆகியவையே பிரதானமானவை என்று அறிஞர்கள் கூறுகின்றனர். மயூர கவி 'சூரியனுடைய குதிரைகள் பச்சை வண்ணமுடையவை' என்று (சு. 46, 47, 60) குறிப்பிட்டுள்ளார்.

## 7. சூரியன் அளிக்கும் பயன்கள்

சூரியனுடைய வெப்பத்தால் உலகில் பல நன்மைகள் ஏற்படுகின்றன என்பது அனைவரும் அறிந்தவையே. பூமியிலிருக்கும் நமக்கு சூரியனே தேவையான வெப்பத்தையும், வெளிச்சத்தையும் தருகின்றது. நமக்குக் கிடைக்கும் சக்திக்கும் மூலகாரணம் சூரியனே. சூரிய வெப்பமில்லாவிட்டால் நமது உடல் நமக்கே பாரமாகி

விடும். படுத்துப் புரள வேண்டியதுதான். ஓட்டாஞ்சில்லி போல காற்றிலே பறக்க நேரிடும், சோகமும், துன்பமும் தான் மிஞ்சும். சூரியனின்றி உயிர்வாழ முடியாது. (சு. 85) உலகில் விலங்கினங்களும், தாவர இனங்களும் உயிர் வாழ்வதே சூரியனால்தான். சூரியன் இல்லையாகில் உலகில் தண்ணீரே இராது. எல்லாம் பனிக்கட்டியாகவே இருக்கும். மழை பொழியாது. பனி பெய்யாது. கோடை மாரிக்காலங்கள் ஏற்படாது. கடல் நீர் ஆவியாகி மழை பொழிந்து அருவிகளிலிருந்து நீர் மின் சக்தி உண்டாகாது. நிலக்கரி, பெட்ரோல் போன்றவற்றின் வெப்ப சக்தியும் சூரியனிடமிருந்தே கிடைக்கின்றன என்பது விஞ்ஞானம். இதன் காரணமாகவே பல சமய நூல்களில் சூரியனைக் கடவுளாகவும், தேவனாகவும் வழிபாடு புரிகின்றனர் மக்கள்.

## 8. யுக முடிவில் சூரியன்:

இவ்வளவு நன்மை தரும் சூரியன் இவ்வுலகை அழிக்கவும், ஆற்றல் படைத்தது. இக்கருத்தை இந் நூலின் 78 ஆம் சுலோகத்தில் கூறியுள்ளார் மயூரகவி. இந்தக் கருத்தையே நவீன விஞ்ஞானிகளும் கூறியுள்ளது ஒப்பு நோக்கத்தக்கது.

விஞ்ஞானிகளின் கருத்து; சூரியன் "ஹைட்ரஜன்" என்ற வளிமத்தால் ஆனது. இதனுள் இடையறாது நிகழ்ந்து கொண்டிருக்கும் அணுக்கரு மோதலினால் தொடர்ந்து சூரிய ஆற்றல் உற்பத்தியாகிக்கொண்டே இருக்கிறது. ஒரு நொடிக்குள் அணுக்கரு வினைபுரியும் ஹைட்ரஜனின் நிறை 45 கோடி டன்கள். இதே ரீதியில் போனால் இன்னும் 500 கோடி ஆண்டுகளுக்குள் சூரியன்

தன் ஹைட்ரஜன் முழுவதும் தீர்ந்து செம்பூதமாக (Red Giant) மாறக்கூடும். அந்த நிலையில்தான் அந்த செந்நிறம் இப்போதிருப்பதை விடவும் ஆயிரம் மடங்கு பொலிவுடன் விளங்கும். சூரியனுடைய வெப்பம் பல மடங்கு உயர்ந்து பக்கத்திலுள்ள புதன், வெள்ளி போன்ற கிரஹங்கள் உருகிப்போகும். புவியில் கடல்கள் வற்றி ஆவியாய் மறையும் உலகில் வெறும் பாறைகளே மிஞ்சும். அதுவும் காரீயத்தையும் (Lead) உருக்கிவிடும் அளவிற்கு அந்த மலைகள் பழுத்திருக்கும். உயிரினங்கள் பூமியில் வாழுமா என்ற கேள்விக்கே இடமில்லை. அந்வான மயானமே என்று விஞ்ஞானிகள் கூறுகின்றனர்.

மயூர கவியின் கருத்து: யுகத்தின் முடிவில் சூரியன் தனது முழுமையான வெப்பத்தால் மிகப் பெரிய நீர்நிலையான சமுத்திரத்தையே வற்றச் செய்து பாலைவனமாக்கி விடுவான். மிகவும் உயர்ந்ததும், சிறப்புற்றதுமான மலைகளைத் தனது வெப்பத்தால் 'தட-தட'வென்று வெடிக்கச் செய்து எள்ளுப் பொடி போலத் தூள் தூளாக்கிவிடுவான் (சு. 78). இந்நிலையில் உயிரினங்கள் வாழ முடியுமா? என்பதை சிந்திக்க வைத்து விடுகிறார் கவி.

ஆகவே, கி. பி. 7ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மயூர கவியின் இக் காப்பியத்தில் காணப்படும் விஞ்ஞானத்தின் கூறுபாடுகளின் வாயிலாக, நமது நாட்டில் வாழ்ந்த அறிஞர்கள் யோக மகிமையினால் விஞ்ஞானக் கருத்துக்களை நன்றாகவே அறிந்திருந்தனர். என்று அறியலாகும். ஆனால், இடைக்காலத்தில் நமது நாட்டில் மன்னர்களுக்குள் ஏற்பட்டிருந்த அரசியல் குழப்பங்களினால் இத்தகைய 'விஞ்ஞான அறிவு மறைந்துவிட்டது' என்று அறிஞர்கள் கூறுவது உறுதிப்படுகிறது.

எனினும் நமது தொன்மை நூல்களான வேதங்கள், இதிகாசங்கள், புராணங்கள், இலக்கியங்கள் ஆகியவற்றில் சூரியனைப் பற்றிய பல செய்திகளையும் இந்நூலில் ஆங்காங்கே சுட்டிச் செல்கிறார் மயூர கவி.

## நூலாசிரியர் வரலாறு:

மயூரகவி — காதம்பரி என்னும் நூலை இயற்றிய பாணபட்டரின் உறவினர் என்று சரித்திர ஆய்வாளர்கள் கூறுவர். எத்தகைய உறவினர் என்பதைத் தீர்மானித்துச் சொல்ல இயலவில்லை; மயூரகவிக்கு பாணபட்டர் மைத்துனன் என்று கொள்வார் சிலர்; சகோதரியின் கணவர் என்பார்கள் சிலர். 'இந்த உறவு ஒரு அருமையான சுலோகத்திற்குக் காரணமாகிறது' என்று மட்டும் நாம் ரஸிக்கலாம்.

மயூரகவிக்கும் அவர் மனைவிக்கும் ஏதோ பிணக்கு. இரவு முழுதும் மன்றாடி அவளைச் சமாதானப்படுத்த முனைகிறான் மயூரன். அவள் மனம் கனியவில்லை. "என் இனியாளே! இரவு போயேவிட்டது. அதோ பார்! சந்திரனும் (என்னைப்போல்) ஒளிமங்கி மறைகிறான். இதோ இந்த விளக்கும் இரவு முழுதும் எரிந்து-சோர்ந்து-திரி கருகி (என்னைப்போல்) உருக்குலைந்து அணைந்து விடும்போல இருக்கிறது. உன் மெல்லிய பாதங்களிலும், தலை சாய்த்துவிட்டேனே! உன் கோபம் தணியாதா? உன் ரோஷத்தை விடமாட்டாயா? என்று முனகி மேலே பேசமுடியாமல் நாத்தழுதழுக்கிறான்.

"गतप्राया रात्रिः कृशतनु शशी शीर्यत इव
प्रदीपोऽयं निद्रावशमुपगतो घूर्णत इव ।
प्रणामान्ते मानं त्यजसि न यथा त्वं कृधमहो"

கத ப்ராயா ராத்ரி: க்ருசதநு சசி சீர்யத இவ

ப்ரதீபோ(அ)யம் நித்ராவசமுபகதோ கூர்ணத இவ ।

ப்ரணாமாந்தே மானம் த்யஜதி நயதா த்வம் க்ருதமஹோ

இந்த மூன்றடிகளுக்கு அடுத்த நான்காம் அடி அறையின் வெளியிலிருந்து அவர்கள் காதுகளில் விழுகிறது. "அப்பப்பா! உன் மார்பகம்தான் கடினமானது என்று நினைத்தேன். அதற்குள்ளே இருக்கும் உன் இதயமும் அவ்வளவு கடினமா?" என்னும் பொருள்பட —

"कुचप्रत्यासत्या हृदयमपि ते चण्डि कठिनम् ॥"

"குசப்ரத்யாஸத்யா ஹ்ருதயமபி தே சண்டி கடினம் ॥"

என்று நான்காம் அடி காதில் விழுகிறது.

இந்த நான்காம் அடியைச் சொன்னவன் பாணபட்டன். பிணக்குத் தீர்ந்து சிரித்துக்கொண்டே தம்பதிகள் அறையிலிருந்து வெளிப்பட்டனர், என்று கதை முடிகிறது. இதைக் கூறியவன் மயூர கவி என்றும் கூறப்படுகிறது. மயூர கவியைப் பற்றிய பிற செய்திகள் தெரியவில்லை.

## மயூர கவியின் காலம்

மயூர கவியின் கவிதைகளை மேற்கோள் காட்டி 'த்வந்யாலோகம்' எழுதிய ஆநந்தவர்தனாசாரியார் தன் இலக்கிய விமர்சனத்தில் பேசுகிறார். ஆநந்தவர்த்தனர் கி.பி. 850க்கு முன் - பின்னாக வாழ்ந்தவர் என்பதாக சரித்திர ஆசிரியர்கள் தீர்மானித்துள்ளனர். ஆகவே, மயூரகவி இவருக்கு முன்னரேயே வாழ்ந்திருக்கவேண்டும். இதுபோலவே பாணபட்டரும் தான் எழுதிய 'ஹர்ஷ சரித்திரத்'தில் மயூரகவியைக் குறிப்பிடுகிறார். ஹர்ஷரின் காலம் கி.பி. 606 - 646 என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இம் மன்னனுடைய ஆஸ்தானப் புலவர்களில் மயூர கவியும் - பாணபட்டரும் இருந்திருக்கிறார்கள். ஆகவே, கி. பி. 7 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் மயூர கவி வாழ்ந்தவர் என்று சொன்னால் தவறில்லை.

## சூரிய சதகத்தின் தோற்றம்

மயூர கவி ஹர்ஷ சக்ரவர்த்தியின் அவைப் புலவராக இருந்தார். அப்போது அவருக்கு 'குஷ்டரோகம்' வந்தது என்றும், அதனால் அவர் அவையிலிருந்து வெளியேற்றப் பட்டார் என்றும், சூரிய சதகத்தை இயற்றி சூரியனை உபாஸித்து குஷ்டரோகம நீங்கினார் என்றும், கர்ண பரம்பரைச் செய்தி ஒன்றுண்டு. ஆயினும், தனக்கு வந்துள்ள நோயைத் தீர்த்துத் தன்னைக் காப்பாற்ற வேண்டுமென்று சூரிய சதகத்தில் ஒருவரியில் கூட அவர் சூரியனை வேண்டவில்லை.

மயூரகவி வாழ்ந்த காலத்தில் சூரிய வழிபாடு பரவலாக நாடு முழுவதும் இருந்துள்ளது. குறிப்பாக வடநாட்டில் அதிகமாகப் பரவி இருந்தது. இதன் காரணமாகவே ஓரிசாவிலுள்ள 'கோநார்க்'கில் சூரியனுக்குக் கலைவளம் நிறைந்த பெருங்கோயில் எழுந்துள்ளது என்றும் இதனை கலிங்கநாட்டு அரசன் நரசிம்மவர்மன் (கி. பி. 1238 - 64) எடுப்பித்துள்ளான் என்றும் வரலாறு கூறுகிறது. இதனால் சூரிய வழிபாடு புரிகின்றவர்களுக்கு சூரியனின் அருள் கிடைக்கட்டும் என்று வேண்டுகிறார் கவி இதுவே சூரிய சதகத்தை மயூர கவி இயற்றக் காரணம் என்பதுவே பெரும்பாலும் பொருந்தும் மேலும், இந்நூலில் சில சுலோகங்களின் ஓசையை வெளிப்படுத்த ஒரே அக்ஷரத்தைப் பல முறை உபயோகப்படுத்தியுள்ளார். இதனால் அதன் சுவைகூடி ரஸிக்க முடிகிறது இதைக் குறித்து இந்நூலின் உரையாசிரியர்களில் ஒருவர், "சில சுலோகங்களில் ஒரே எழுத்தை (அக்ஷரத்தை)ப் பயன் படுத்துவதன் மூலம் அதன் மந்திர சக்தியை வெளிப்படுத்திப் பாராயணம் செய்வோருக்கு நற்பயன்கள் பெருக அருளு கிறார்" என்று குறிப்பிட்டுள்ளாரென அறிய முடிகிறது. உதாரணமாக 36 ம் சுலோகத் தில் த்ய(த்ய) என்ற எழுத்தும்; 70ல் न्द(ந்த) என்ற எழுத்தும், 94ல் श(ச) என்ற எழுத்தும் அதிகமாகப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. இவற்றை

யெல்லாம் கருத்தில் கொண்டால் சூரியனின் அருள் பெற்றுய்ய இந்த நூல் பயனளிக்கவல்லது என்பதையும் அறியலாகும்.

## மயூரகவியின் பிற நூல்கள்

சூர்ய சதகத்தைத் தவிர மயூரகவி இயற்றிய நூல்கள் 1. மயூராஷ்டகம், 2. ஸுபாஷித சங்க்ரஹம் ஆகியன,

1. **மயூராஷ்டகம்** என்னும் இந்த நூலை மயூரகவி இயற்றியுள்ளதாக இலக்கிய ஆராய்ச்சியாளர்கள் எடுத்துக் காட்டுகிறார்கள்.

2. **ஸுபாஷித சங்க்ரஹம்:** சிறந்த இலக்கியக் கோவைகளில் இப்புலவர் பெருமான் இயற்றியதாகப் பதினாறு சுலோகங்கள் காணப்படுகின்றன. இவற்றில் தேனூறும் இனிய சிருங்கார ரஸம் ததும்புகிறது.

அவையாவன:

ஒன்று முதல் ஏழு சுலோகங்கள் வரை பார்வதியும் பரமேச்வரனும் சொக்கட்டான் ஆடியது பற்றிய வர்ணனை.

எட்டாவது சுலோகம்: சாம்ராட் ஹர்ஷவர்த்தனரைப் புகழ்ந்து எழுதியது.

ஒன்பதாவது சுலோகம்: ஒரு பசுவும் அதன் கன்றும் தமக்குள் அன்பொழுகப் பரிவு காட்டிக் கொள்வதைச் சித்தரிக்கின்றது.

பத்தாவது சுலோகம்: இரு கழுதைகள் காதல் ஜோடிகளாக நையாண்டி செய்யப்படுகின்றன.

பதினொன்றாவது சுலோகம்: ஒரு பரதேசியின் மேல் துண்டு பற்றிய அழகிய வர்ணனை.

12 ஆவது சுலோகம் : காதலர்களின் பிரிவாற்றாமை.

13 ஆவது சுலோகம் : பரமேச்வரன் முப்புரமெரித்த லீலை.

14 ஆவது சுலோகம் : உமையம்மையின் பிணக்கு.

15 ஆவது சுலோகம் : நரசிங்கமாக அவதரித்த மஹாவிஷ்ணுவின் நகங்கள் மிக அழகாக வர்ணிக்கப்படுகிறது.

16 ஆவது சுலோகம் : குழந்தை கண்ணனின் கனவு, அதில் பிரம்மதேவனையும், பரமேச்வரனையும், பிற தேவதைகளையும் அருகே அமரும்படி கண்ணன் வேண்டுகிறான். யசோதை, குழந்தையின் மழலைப் பிதற்றலைக் கேட்டுத் திகைக்கிறாள்.

## தமிழகத்தில் சூரிய சதகத்தின் பயன்பாடு :

குறிப்பாக, தமிழகத்தில் தொன்மைக் காலந்தொடங்கியே சூரிய வழிபாடு இருந்துவருகிறது. மாமல்லபுரத்தின் குகைச் சிற்பங்களில் சூரியன் உள்ளான். சோழ மன்னர்கள் தங்களை சூரிய குலத்தினராகக் கூறிக்கொண்டனர். தமிழகத்திலுள்ள சிவாலயங்களில் சூரியன் பரிவார தேவதையாகவும், கீழ்த்திசைக் கடவுளாகவும் வழிபட்டனர். பிற்காலத்தில் நவக்கிரகங்களில் ஒருவராக சிலா மூர்த்தியாக அமைத்து வழிபடலாயினர். 'மயூர சதகமாகிய இந்தப் பநுவலை பண்டிதர் முதல் சாதாரண மக்கள்வரை ஸம்ஸ்கிருத மொழி தெரிந்தவர்களால் பாராயணம் செய்யப்பெற்றுவந்துள்ளது என்று அறியமுடிகிறது.

மயிலை ஸம்ஸ்கிருதக் கல்லூரி முதல்வர் திரு. P V. சிவராம தீக்ஷிதர் அவர்கள் பதிப்பித்துள்ள நூலின் முகவுரையில் 'காஞ்சீ ஸ்ரீகாமகோடிபீடம் மஹாஸ்வாமிகள் ஒருசமயம் காஞ்சியில் தங்கியிருந்த காலத்தில் காஞ்சீபுரத்திலுள்ள கச்சபேச்வரர் ஆலயத்திலுள்ள பாநு தீர்த்தத்தில் நீராடி அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு திரும்பும் சமயத்தில் படிகளில் காணப்பட்ட கல்வெட்டுக்களைக்

கண்டு படித்து மகிழ்ந்தார்கள். பின்னர் அவரை தரிசிக்க வந்திருந்த கல்வெட்டு ஆராய்ச்சியாளர் திரு. T. N. ராமச் சந்திரன் அவர்களிடம் அக்கல்வெட்டைப் படித்துவரச் சொல்லி இது 'சூரிய சதகம்'தான் என்பதை உறுதிபடுத்திக் கொண்டார் சுவாமிகள்'' என்று குறிப்பிட்டுள்ளார்.

இதனால், சூரிய சதகம்' தமிழ் நாட்டில் கல்வெட்டில் பொறிக்கப்படும் அளவுக்குப் பரவி பலரும் படித்தறியும் வாய்ப்பும் தமிழக மன்னர்களால் செய்து கொடுக்கப் பட்டுள்ளதை அறிந்து மகிழலாம். மேலும், இந்த நூலகத் திற்குப் பலர் அன்பளிப்பாக அளித்துள்ள ஓலைச் சுவடி களிலும், காகிதச் சுவடிகளிலும் சூரிய சதகத்தின் மூல நூல் மற்றுமுள்ள பல பிரதிகள் கிடைத்துள்ளன. இவற்றின் வாயிலாகவும் பலர் இந்த நூலைப் பாராயணம் செய் துள்ளனர் என்றும் அறிய முடிகிறது.

## சூரிய சதகத்தின் உரை நூல்கள்

சூரிய சதகத்திற்கு 14 உரை நூல்கள் உண்டு. அவற்றை எழுதியுள்ள ஆசிரியர்கள்;

1. மதுசூதனர் இயற்றிய பாவபோதினி என்னும் உரை நூல்.
2. ஜகன்நாதர் இயற்றிய உரை
3. வல்லபதேவர் இயற்றிய ஸூர்யானுவாதினீ என்னும் உரை நூல்
4. யக்ஞேச்வர சாஸ்திரி இயற்றிய உரை
5. திரிபுவநபாலர் இயற்றிய உரை
6. ஜயமங்களர் ,, ,,
7. ரங்கதேவர் ,, ,,
8. கங்காதரர் ,, ,,
9. பாலமபட்டர் ,, ,,
10. ஹரிவம்சர் ,, ,,
11. கோபீநாதசூரி ,, ப்ரபாவளீ என்னும் உரை
12. ராமபட்டர் ,, உரை

13. அன்வயமுகர் இயற்றிய உரை
14. ராமச்சந்திரர் ,, ,,
15. லிங்கையர் ,, ,,

இவற்றில் சில உரை நூல் மட்டுமே அச்சாகியுள்ளதாக அறியமுடிகிறது. பல உரைகள் இன்னும் அச்சில் வெளிவரவில்லை என்பது ஆராய்ச்சியாளர்களின் கருத்து.

தற்போது, இப்பதிப்பில் முதன்முதலாக கோபிநாத ஸூரி என்னும் ஆசிரியரால் இயற்றப்பட்ட "ப்ரபாவளீ" என்னும் உரை நூல் அச்சாகி வெளிவருகிறது. இந்த நூலில் ஆசிரியரைப் பற்றிய செய்திகள் ஏதும் கிடைக்கவில்லை.

"ப்ரபாவளீ" என்னும் இந்த உரைச் சுவடியின் மற்றொரு பிரதி சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் (1320 Taylor II 212) ஒரு சுவடி இருப்பதாக N. C. C. Vol. II-ன் மூலம் அறியமுடிகிறது.

## சுவடியின் வரலாறு

தஞ்சை சரஸ்வதி மஹால் நூலகத்தின் ஸம்ஸ்கிருதப் பிரிவில் B. 4966/D. 3944 ஆம் எண்ணில் ஒரு காகிதச் சுவடி உள்ளது. இது முழுமையான சுவடி. இதில் எழுத்துப் பிழைகளும், சிற்சில பதங்கள் குறைந்தும் நிறைந்தும் காணப்படுகிறது. மற்றொரு சுவடி B. 10324/D. 3945 ஆம் எண்ணில் வைத்துப் பாதுகாக்கப்படும் ஓலைச் சுவடி. இது குறையான பிரதி. மிகவும் மோசமாகவும் படிக்க அரியதாகவும் உள்ளது. இதில் காணும் உரை முற்றிலும் வேறுபட்டதாகவும் இருக்கிறது. இதன் உரையாசிரியர் யார் என்று கண்டுபிடிக்க இயலவில்லை.

ஆகவே, இந்நூலகத்தில் கிடைத்துள்ள காகிதச் சுவடி (B. 4966/D. 3944)யை மட்டுமே வைத்துக் கொண்டு இந் நூல் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. இதன் மூல சுலோகங்

களுக்குரிய பாடபேதங்களுக்காக கீழே காணும் சுவடிகள் பயன்படுத்தப்பட்டன

1. A B. No 4954/D. No 3939
2. B. B. No. 4953/D. No. 3942
3. C. B. No. 4955/D. No. 3943
4. D. B. No 4952/D. No 3958

இத்துடன் சௌகாம்பா வித்யாபவன் — வாரணாசி பதிப்பகத்தாரால் வெளியிடப்பெற்ற "ஸ்ரீ ராமகாந்த த்ரிபாடி" அவர்களின் பதிப்புப் புத்தகமும், சென்னை, மயிலாப்பூர் ஸம்ஸ்கிருதக் கல்லூரியின் முன்னாள் முதல்வர் ஸ்ரீ P. V. சிவராம தீக்ஷிதர் அவர்களால் வெளியிடப்பட்ட நூலும் பரிசீலனைக்காக எடுத்துக் கொள்ளப்பட்டன.

நூலாசிரியர் மயூரகவி வேதங்கள், உபநிஷத்துக்கள், சாஸ்திரங்கள், மஹாபாரதம், காவியாதிகள் ஆகியவற்றில் கூறப்பட்ட கருத்துக்களை இக்காவியத்தில் கூறியுள்ளார். இருப்பினும் மஹாபாரதத்தில் காணப்படும் செய்திகள் இதில் பரவலாகக் காணமுடிகிறது. மேலும் மஹாபாரதம் வனபர்வாவில் காணப்படும் "ஸௌர்ய ஸ்தோத்திரமே" இந்த நூல் எழுத அடிப்படை நூலாக இருக்கும் என்று கருதமுடிகிறது. அதில் காணும் சூரியனின் பெயர்களையும் பிற செய்திகளையும் இந்த சூரிய சதகத்தில் காணலாகும். இதன் காரணமாக இந்த நூலின் அநுபந்தமாக யுதிஷ்டிரர் அருளிய ஸௌர்ய ஸ்தோத்திரமும் வெளியிடப்பட்டுள்ளது.



॥ श्रीः ॥

श्रीमयूरकविप्रणीतं

# ॥ सूर्यशतकम् ॥

ஸ்ரீ மயூரகவி இயற்றிய

## ஸூர்யசதகம்

जम्भारातीभकुम्भोद्भवमिव दधतः सान्द्रसिन्दूररेणुं
रक्ताःसिक्ता इवौघैरुदयगिरितटीधातुधाराद्रवस्य ।
आयान्त्या तुल्यकालं कमलवनरुचेवारुणा वो विभूत्यै
भूयासुर्भासयन्तो भुवनमभिनवा भानवो भानवीयाः ॥ १

जम्भेति । जम्भो नाम कश्चिदसुरः । तस्य आरातिः शत्रुः, इन्द्रः । तस्य इभः ऐरावतः । तस्य कुम्भौ तयोः उद्भवः आविर्भावः यस्य तं जम्भारातीभकुम्भोद्भवम् । अनेन किमभिधीयते ? सान्निध्यात्पूर्वदिगिभकुम्भोद्भवमित्यभिधीयते । सिन्दूरं नाम कश्चिद्रक्तद्रव्यविशेषः । सिन्दूराणां रेणुः सान्द्रश्चासौसिन्दूररेणुश्च तं सान्द्रसिन्दूररेणुं । "रेणुर्द्वयोः स्त्रियांधूलली"त्यमरः । दधतः धारयन्त इव । रक्ताः लोहिताः । उदयत्यस्मादस्मिन्वा उदयः । उदयश्चासौ गिरिश्च उदयगिरिः उदयपर्वतः । तस्य तटयः वप्राः तासु धातवः गैरिकाणि धाराः तासां द्रवस्य । ओघैः प्रवाहैः सिक्ता इव क्षालिता इव । अत्रापि रक्ता इव सम्बध्यते । तुल्यः समानः कालो यस्मिन् कर्मणि तत् तुल्यकालम् । आयान्त्या आविर्भवन्त्या । कमलानि पद्मानि तेषां वनं तस्य रुक् दीप्तिस्तया कमलवनरुचेव अरुणाः

ताम्राः । भुवनं लोकं । भासयन्तः । एकवचनमुपलक्षणम् । भुवनानि भासयन्तीत्यर्थः । अभिनवाः प्रत्यग्राः । भानोरिमे भानवीयाः । सूर्य सम्बन्धिनः । भानुशब्दस्य भानवो रश्मयः । वः युष्माकं । भूत्यै श्रियै भूयास्तुः ॥ १

ஜம்பாராதீபகும்போத்பவமிவ ததத:
ஸாந்த்ர ஸிந்தூரரேணும்
ரக்தா: ஸிக்தா இவௌகை: ருதயகிரிதடீ-
தாதுதாராத்ரவஸ்ய ।
ஆயாந்த்யா துல்யகாலம் கமலவனருசே-
வாருணா வோ விபூத்யை
பூயாஸுர்பாஸயந்தோ புவனமபிநவா
பாநவோ பாநவீயா: ॥

சூரியன் கிழக்குத் திசையில் தன் செங்கதிர்களைப் பரப்பிக்கொண்டு உதயமாகிறான். அவன் கிரணங்கள் ஏன் சிவந்தன ? கவியின் கற்பனைகளும் உதயமாகின்றன.

கிழக்குத் திசையிலிருந்து சூரியன் கிளம்புவதால், அத்திசையின் அதிபதியான இந்திரன், தன் வெள்ளை யானையின் மஸ்தகங்களில் சிந்தூரப் பொடிகளால் அலங்கரித்திருப்பான் அப்பொடிகளின் மேல் பட்டு வருவதால் இவனது கிரணங்களும் சிவந்து விட்டனவோ ? அல்லது கீழ்த்திசையில் உதய பர்வதம் தென்படுகிறது. அங்கு, ஆங்காங்கு மலைகள் உருகி வந்து வழிகின்றன. பொடிகள் சிதறியுள்ளன. அவைகளின் மீது பட்டதால் இவன் கிரணங்களும் செந்நிறமாயினவோ ? அல்லது சூரியன் உதித்ததும் செந்தாமரைகள் மலர்ந்துவிட்டன அல்லவா ? அவற்றின் மீது கிரணங்கள் பட்டதால் அக் கிரணங்களும் சிவந்துவிட்டனவோ ? என்று வியக்கும் வண்ணம் உதயமாகும் சூரியனின் கிரணங்கள் உங்களைக் காக்கட்டும்.

भक्तिप्रह्वाय दातुं मुकुलपुटकुटीकोटरक्रोडलीनां
लक्ष्मीमाक्रष्टुकामा इव कमलवनोद्घाटनं कुर्वते ये ।
कालाकारान्धकारानन पतितजगत्साध्वसध्वंसकल्पाः
कल्याणं वः क्रियासुः किसलयरुचयस्ते करा भास्करस्य ॥

भक्तिप्रह्वायेति । भासं करोतीति भास्करः सूर्यः । तस्य भास्करस्य । ये कराः किरणाः । भक्त्या प्रह्वः प्रणतः तस्मै । भक्तिप्रह्वाय यजमानायेति शेषः । दातुम् । मुकुलानि कुड्मलानि । "कुड्मलो मुकुलोऽस्त्रियामि"त्यमरः । तेषां पुटानि तान्येव कोटरं मध्यविवरम् । तस्य क्रोडः अपवरकम् । तस्मिन् लीनां लक्ष्मीं श्रियम् । आक्रष्टुमाहर्तुं कामः येषां ते आक्रष्टुकामाः । इव । "तुं काममनसोरपि" इति मकारलोपः । कमलवनानामुद्घाटनं विकासः तत्कमलवनोद्घाटनम् । कुर्वते आकर्षणसामर्थ्यात्करा इत्युक्तम् । कालो यमः तस्य आकार इव आकारो यस्य सः कालाकारश्चासावन्धकारश्च तस्य आननं मुखम् । तस्मिन् पतितं यस्य तत् । जगत् तस्य साध्वसं भयं । तस्य ध्वंसो नाशः । तस्मिन् कल्पाः समर्थाः । किसलयानां पल्लवानां रुचिः छाया येषां ते किसलयरुचयः । भास्करस्य ते कराः । वः कल्याणं मङ्गलं क्रियासुः ॥ २

*பக்திப்ரஹ்வாய தாதும் முகுலபுடகுடீ-*
*கோடரக்ரோடலீனாம்*
*லக்ஷ்மீமாக்ரஷ்டுகாமா இவ கமலவனோ-*
*த்காடனம் குர்வதே யே ।*
*காலாகாராந்தகாரானனபதிதஜகத்-*
*ஸாத்வஸத்வம்ஸகல்பா:*
*கல்யாணம் வ: க்ரியாஸு:*
*கிஸலயருசயஸ்தே கரா பாஸ்கரஸ்ய ॥* 2

சூரியன் தன் செங்கதிர்களால் தாமரை மலர்களை மலரச் செய்கின்றானல்லவா ! அதன் காரணத்தைக் கவி வெளியிடுகின்றார்:

தாமரை மலர் மஹாலக்ஷ்மியின் இருப்பிடமென்பது அனைவருக்கும் தெரியும். அவள், மலரப்போகும் தாமரையின் 'மொக்கு' என்ற குடிலில் ஒளிந்து கொண்டவள் போல அமர்ந்திருக்கிறாள். இந்நிலையில், தன்னை வணங்கும் பக்தர்களுக்கு லக்ஷ்மியின் கடைக்கண் நோக்கும், அதனால் செல்வமும் உண்டாகவேண்டும் என்ற எண்ணத்தால் 'கிரணங்கள் என்ற தனது கைகளால்' தாமரை மொட்டுக்களைத் திறந்துவிடுகிறான் சூரியன். உள்ளே அமர்ந்திருக்கும் லக்ஷ்மி தென்படுகிறாள். அவள் பார்வை பக்தர்களின் மேல் விழுகிறது. அவர்களும் செல்வந்தர்கள் ஆகின்றனர். அதற்காகத்தான் சூரியன் தாமரையை மலரச் செய்தானோ ?

சூரியன் உதயமானால், எங்கும் பரவியுள்ள இருள் நீங்கும் என்பது யாவரும் அறிந்ததே. ஆயினும் கவியின் கற்பனை. இருள் கருமை நிறமுள்ள யமனைப் போன்றது. யமன், மக்களின் உயிரை வாங்கி கீழே வீழ்த்திவிடுகிறான். இருள், மக்களின் உணர்வை (வாங்கி படுக்கையில்) வீழ்த்தி விடுகிறது. ஆகவே, சூரியன் தன் ஆயிரக்கணக்கான கிரணங்களாகிற கைகளால் யமனையொத்த இருளை வீழ்த்தி மக்களின் சங்கடங்களை போக்கி தங்களது செயல்களில் ஈடுபடச்செய்கிறான்.

இவ்வாறு, மக்களின் வாழ்க்கையை உயர்த்தும் சூரியனின் மாந்துளிர்போலச் சிவந்த இளம் கதிர்கள் உங்களைக் காக்கட்டும்,

गर्भेष्वम्भोरुहाणां शिखरिषु च शिताग्रेषु तुल्यं पतन्तः
प्रारम्भे वासरस्य व्युपरतिसमये चैकरूपास्तथैव ।
निष्पर्यायं प्रवृत्तास्त्रिभुवनभवनप्राङ्गणे पान्तु युष्मा-
नूष्माणं सन्तताध्वश्रमजमिव भृशं बिभ्रतो ब्रध्नपादाः ॥ ३

गर्भेष्विति । अम्भोरुहाणां पद्मानां गर्भेषु उदरेषु, शिताग्रेषु तीक्ष्णशृङ्गेषु । शिखराणि एषां सन्तीति शिखरिणः पर्वताः तेषु शिखरिषु च । तुल्यं मानं क्रियाविशेषणम् । एकरूपमिति यावत् । पतन्तः । वासरस्य दिनस्य । प्रारम्भे प्रातःकालेऽप्युपरतिसमये समाप्तिकाले च अस्तमयसमय इत्यर्थः । चकारः समुच्चये । तथैव पूर्ववत् । एकरूपाः समानदीप्तयः (रक्तवर्णा) इत्यर्थः । निर्गतः पर्यायो यस्मिन् कर्मणि तत् निष्पर्यायं, युगपदित्यर्थः । त्रीणि भुवनानि त्रिभुवनं, त्रिभुवनमेव भवनं गृहं, "भवनागारमन्दिर"मित्यमरः । तस्य प्राङ्गणं तस्मिन् त्रिभुवनभवनप्राङ्गणे प्रवृत्ताः । अध्वनि श्रमः सन्ततश्चासावध्वश्रमश्च । तस्माज्जातं सन्तताध्वश्रमजनितम् । ऊष्माणं उष्णत्वं भृशमित्यर्थः । बिभ्रतः धारयन्तः ब्रध्नस्य । "भास्कराहस्करब्रध्न" इत्यमरः । पादाः रश्मयः "पादा रश्म्यङ्घ्रितुर्यांशाः" इत्यमरः । युष्मान् पान्तु रक्षन्तु सन्तता-ध्वश्रमजमिति पदसामर्थ्यात्पादशब्दोऽत्रविवक्षितः ॥ ३

*கர்பேஷ்வம்போருஹாணாம் சிகரிஷு ச*
*சிதாக்ரேஷு துல்யம் பதந்த:*
*ப்ராரம்பே வாஸரஸ்ய வ்யுபரதிஸமயே*
*சைகரூபாஸ்ததைவ ।*
*நிஷ்பர்யாயம் ப்ரவ்ருத்தா - ஸ்த்ரிபுவந-*
*பவந ப்ராங்கணே பாந்து யுஷ்மாந்*
*ஊஷ்மாணம் ஸந்ததாத்வ-*
*ச்ரம-மிவ ப்ருசம் பிப்ரதோ ப்ரத்ந பாதா;* 3

முதலிரண்டு சுலோகங்களில் சூரியனின் கிரணங்களின் செந்நிறத்தைப் புகழ்ந்து பேசினார் கவி. இந்த சுலோகத்தில் கிரணங்களின் வீச்சைப் புகழ்ந்து பேசுகிறார்.

எந்த ஒளியும், அதன் வீச்சு அகல அகல ஒளி குன்றித்தான் போகும், ஆனால் சூரியனுடைய ஒளி மட்டும் குன்றாது, சூரிய ஒளி கிளர்பும் இடத்தில் எத் திறத்ததோ அது பாயும் இடத்திலும் அதே திறத்தி லுடையது. அது குளத்தில் மலரும் தாமரையாகட்டும், வானளாவி வளர்ந்த பர்வதத்தின் உச்சிமூளையாகட்டும் ஒரே திறத்தினுடையது. சில ஒளிகள் ஒளிரத் துவங்கும் போதும், அணையும் போதும் சற்றுக் குறைவாகத்தான் பிரகாசிக்கும். ஆனால் சூரியனின் ஒளி உதயமாகும் போதும், அஸ்தமிக்கும் போதும் அல்லது நடுப்பகலிலும் ஒரே திறத்தவை. ஆயின் உதயத்தின் போதும், அஸ்தமனத்தின் போதும் செந்நிறமாகவும், நண்பகலில் வெள்ளை நிறமாகவும், வண்ணத்தில் மட்டுமே வித்யாஸம் அவ்வளவே.

சூரியன் கிழக்கில் உதித்து மேற்கே மறைகிறான் என்பது உலக வழக்கு - கவிவழக்கு. உண்மையில் சூரியன் உதிப்பதுமில்லை. மறைவதுமில்லை. ஒருவன் நீண்ட தூரம் நடந்து சென்று களைத்துவிட்டால் அவன் சற்று ஓய்வு வேண்டி தனது கால்களை அகட்டிப் பரப்பி நின்று இளைப்பாறுவான். இதைப் போலவே, சூரியனும் தனது கிரணங்களாகிய பல கால்களை அகட்டி, குத்திட்டு நிற்கிறான் போலும், என்கிறார் கவி

சூரியனைச் சொல்லக்கூடிய சொற்கள் பலவுண்டு. அவற்றில் எங்குமே உபயோகப்படாத 'ப்ரத்ந' (प्रत्न) என்ற சொல் இங்கு உபயோகப்படுத்துவது சாலச் சிறந்தது. (எல்லை) கட்டுகிறவன் என்று பொருள். 'ஆண்டவன் படைத்த பிரபஞ்சம் இவ்வளவுதான்' என்று எல்லை கட்டு கிறவன் சூரியன் மட்டுமே. ஆண்டவன் படைத்த உலகின் பரப்பெங்கிலும் ஒளியைப் பாய்ச்சுபவன் என்றும் பொருள் கொள்ளலாம்.

प्रभ्रश्यत्युत्तरीयत्विषि तमसि समुद्वीक्ष्य वीतावृतीन्प्राग्-

जन्तूंस्तन्तून्यथा यानतनु वितनुते तिग्मरोचिर्मरीचीन् ।

ते सान्द्रीभूय सद्यः क्रमविशददशाशादशालीविशालं

शश्वत्संपादयन्तोऽम्बरममलमलं मङ्गलं वो दिशन्तु ॥ ४

अथ सूर्यस्य तन्तुवायेन साम्यमुच्यते प्रभ्रश्यतीति । तिग्मानि तीक्ष्णानि रोचींषि यस्य सः तिग्मरोचिः सूर्यः । उत्तरीयं प्रावरणं तस्य त्विडिव त्विट् यस्य तत् तस्मिन् उत्तरीयत्विषि । तमसि अन्धकारे प्रभ्रश्यति विनश्यति । वीता विगता । आवृतिः आवरणं येषां ते तान् वीतावृतीन् । जन्तून् प्राणिनः । समुद्वीक्ष्य दृष्ट्वा । प्राक् प्रभाते । मरीचीन् करान् । "भानुः करो मरीच्यस्त्रीत्यमरः" । यथा तन्तूनिव । अतनु महत् । वितनुते विस्तारयते । यथा तन्तुवायोप्युत्तरीये प्रभ्रश्यति सति, विगतावृतीन् विगतप्रावरणान् जन्तून्वीक्ष्य तन्तूनतनु वितनुते विस्तारयति तद्वदित्यर्थः । ते मरीचयस्तन्तवश्च सान्द्रीभूय सद्यः । क्रमेण परिपाट्या । विशदाः निर्मलाः । दश च ताः, आशाः दिशश्च । क्रमविशददशश्च ताः दशाशाश्च ताः एव दशाः । तासां आली पङ्क्तिः । तया विशालं विस्तीर्णम् । अमलं निर्मलम् । अम्बरं आकाशं वस्त्रं च । सम्पादयन्तः । वः युष्मभ्यं चतुर्थीबहुवचनम् । अलं अत्यर्थम् । शश्वत् मङ्गलं दिशन्तु ॥ ४

ப்ரப்ரச்யத்யுத்தரீய த்விஷி தமஸி

ஸமுத்வீக்ஷ்ய வீதாவ்ருதீந் ப்ராக்

ஜந்தூந் தந்தூந் யதா யாநதநு

விதநுதே திக்மரோசிர் மரீசீந் ।

தே ஸாந்த்ரீபூய ஸத்ய: க்ரமவிசத-
தசாசா தசாலீவிசாலம்
சஸ்வத் ஸம்பாதயந்தோऽம்பர-
மமலமலம் மங்கலம் வோ திசந்து || 4

பொதுவாக, போர்வையோ அல்லது திரையோ 'ஒரு பொருளை மூடி மறைத்துவிடும்'. இதைப்போலவே, இருளும் பொருளின் தன்மை, நிறம், வனப்பு ஆகிய அனைத்தையுமே மூடி மறைத்து விடுகிறது. ஆனால் ஆடையோ அதை அணிகின்ற ஆடவனாகட்டும், பெண் மகளாகட்டும் அவர்களின் தன்மை, நிறம், வனப்பு, திறன் ஆகியவற்றை வெளிப்படுத்தி அழகூட்டுகிறது.

இதைப்போல, சூரியன் உதிக்கும்போதே 'இருள்' என்ற திரையை அகற்றி, குறுக்கும் நெடுக்குமாக (ஊடு நூல் - பாவுநூல் போல) பத்துத் திசைகளிலும், பாயும் 'கிரணங்கள்' என்ற நூலைச் செலுத்தி ஆடையாகப் புனைந்து, பொருட்களின் மேல் படிய வைத்து; அந்தப் பொருட்களின் தன்மை, நிறம், வனப்பு திறன் ஆகியவற்றை விளக்கிக் காண்பிக்கிறான். இத்தகைய ஒளியென்ற நிர்மலமான ஆடையாக, பத்துத் திசைகளிலும் பரவி ஆகாயத்தின் பரப்பளவு விரிந்த கிரணங்கள் — **क्रम विशद - दशाशा - दशाली - विशालम्** மங்களங்களை நல்கட்டும்.

**न्यक्कुर्वन्नोषधीशे मुषितरुचि शुचेवौषधीः प्रोषिताभाः**
**भास्वद्ग्रावोद्गतेन प्रथममिवकृताभ्युद्गतिः पावकेन ।**
**पक्षच्छेदव्रणासृक्स्रुत इव दृषदो दर्शयन्प्रातरद्रे**
**आताम्रस्तीव्रभानोरनभिमतनुदे स्तादुगभस्त्युद्गमो वः ॥ ५**

न्यक्कुर्वन्निति ॥ आसमन्तात्ताम्रः आताम्रः अतिलोहित इत्यर्थः । ओषधीनां तृणज्योतिषामीशश्चन्द्रः तस्मिन्नोषधीशे, मुषिता अपहृता रुक्

दीप्तिर्यस्य सः तस्मिन्मुषितरुचि सति, शुचा प्रोषिता नष्टा, आभा दीप्तिर्यासां ताः प्रोषिताभाः । ओषधीः न्यक्कुर्वन्, भाः अस्यास्तीति, भास्वान् सूर्यः, तस्य ग्रावाणः सूर्यकान्तमणयः तेभ्य उद्गतः । तेन भास्वद्ग्रावोद्गतेन पावकेन प्रथमं कृता अभ्युद्गतिरभ्युत्थानं यस्य सः । कृताभ्युद्गतिः --विवर्तमानः सूर्यरश्मिसङ्क्रमणात्सूर्यकान्तमणिभ्यः कृशानुरुत्पद्यत इति लोकप्रसिद्धम् । प्रातः प्रभाते अद्रेरुदयपर्वतस्य । पक्षयोरुच्छेदः खण्डनं तेन व्रण तस्य । असृक् रुधिरं तत्स्रवन्तीति पक्षच्छेदव्रणासृक् स्रुत इव । दृषदः शिलाः "पाषाणप्रस्तरग्रावोपलाश्मानः शिला दृषदि"त्यमरः दर्शयन् प्रकटयन् । तीव्रा भानवो यस्य सः तीव्रभानुः तस्य तीव्रभानोर्गभस्तीनां "गभस्तिघृणिघृष्टय" इत्यमरः । उद्गमः उदयः । युष्माकं अनभिमतं पापं नुदतीत्यनभिमतनुत् तस्मै अनभिमतनुदे तन्नाशायेत्यर्थः । स्तात् अस्तु । "तुह्योस्तातङाशिष्यन्यतरस्यामि"ति तोस्तातङादेशः ॥ ५

*ந்யக்குர்வன் னோஷதீசே முஷிதருசி*
*சுசேவெளஷதீ: ப்ரோஷிதாபா:*
*பாஸ்வத்-க்ராவோத்-கதேந*
*ப்ரதமமிவ க்ருதாப்யுத்கதி: பாவகேன ।*
*பக்ஷச்சேத-வ்ரணா-ஸ்ருக்ஸ்ருத இவ*
*த்ருஷதோ தர்சயன்-ப்ராத-ரத்ரே:*
*ஆதாம்ர-ஸ்தீவ்ர-பாநோ; அநபிமதநுதே*
*ஸ்தாத்-கபஸ்த்யுத்-கமோ வ: ॥* 5

*கீழ்வானில் சூரியன் உதயமாகிறான். அச்சமயத்தில் கீழ்த்திசையெங்கும் வானம் சிவந்து காணப்படுகிறது. இக்காட்சியைக் கண்ட கவி, 'வானம் சிவந்து காணப்படுவதன் காரணம்தான் என்ன?' என்று சிந்திக்கிறார். அவருடைய கவியுள்ளத்தில் கற்பனைகள் பிறக்கின்றன.*

சூரியன் உதிக்கின்ற காரணத்தால் சந்திரன் ஒளி இழந்துவிடுகிறான். சந்திரனின் மனைவிகளான ஓஷதிகள்[1] (மரம்-செடி-கொடிகள்), "சூரிய உதயத்தால் தனது கணவன் 'ஒளி இழந்துவிட்டானே' " என்று வருந்தி துன்பப்படுகின்றனர், அந்த துன்பத்தின் வெளிப்பாடுதான் கீழ்வானம் சிவந்து காணப்படுகிறதோ? அல்லது சூரியன் உதயமாவதால், உதயகிரியிலுள்ள சூரியகாந்தக் கற்பாறைகளிலிருந்து தீப்பிழம்புகள் கிளம்புகின்றன.[2] அத்தீப்பிழம்புகளின் ஜ்வாலைகள் சூரியனுக்கு நல்வரவு கூறி, கொழுந்துவிட்டு எரிகின்றன. இக்காரணத்தால்தான் வானம் செவ்வானமாகக் காட்சி நல்குகின்றதோ? அல்லது இந்திரன், தனது சக்தியென்ற ஆயுதத்தால் மலைகளின் சிறகுகளை வெட்டி வீழ்த்தியபோது[3] உதயகிரியின் சிறகுகளை வெட்டி வீழ்த்திவிட்டானோ? அச்சிறகுகளிலிருந்து ஒழுகிப் பெருகும் ரத்தத்தின் சிவப்போ? என்று எண்ணுவது போலத் தோன்றும் சூரியனின் சிவந்த கிரணங்கள் உங்களுடைய துன்பங்களைப் போக்கட்டும்,

शीर्णघ्राणाङ्घ्रिपाणीन्व्रणिभिरपघनैर्घर्घराव्यक्तघोषान्
दीर्घाघ्रातानघौघैः पुनरपि घटयत्येक उल्लाघयन् यः ।
घर्मांशोस्तस्य वोऽन्तर्द्विगुणघनघृणानिघ्ननिर्विघ्नवृत्ते-
र्दत्तार्घाः सिद्धसङ्घैर्विदधतु घृणयः शीघ्रमंहोविघातम् ॥ ६

---

1. ஓஷதிகளின் கணவனாகச் சந்திரன் உருவகிக்கப்படுகிறான்.

2. சூரிய காந்தக்கல் என்று ஒன்று உண்டு என்றும் அது சூரியனின் கிரணங்கள் பட்டதும் தீயை உமிழும் என்பதும் கவி மரபு,

3. மலைகளின் இறக்கைகளை இந்திரன் வெட்டினான் என்றும், இதன் காரணமாகவே மலைகள் பறக்காமல் நிலைத்துவிட்டன என்றும் வேத, இதிஹாஸ, புராணங்களில் குறிப்புக்கள் காணப்படுகின்றன.

इदानीं सूर्यस्याखिलरोगमङ्घातविघट्टनपटुत्वमाह शीर्णेति । उल्लाघो व्याधिनिर्मोकः । उल्लाघं करोतीत्युल्लाघयन् "तत्करोति तदाचष्ट" इति निच् प्रत्ययः । एकः एकपक्षः, यः घर्मांशुः सूर्यः घ्राणं च अङ्घ्रिश्च पाणिश्च घ्राणाङ्घ्रिपाणि द्वन्द्वश्च "प्राणितूर्यः सेनांगानामि"ति द्वन्द्वैकवद्भावः । शीर्णं छिन्नं घ्राणाङ्घ्रिपाणि व्रणमेषां अस्तीति व्रणिनः, तैः व्रणिभिः अपघनैः अङ्गैः "अपघनोऽङ्गमि"ति निपातनात् । उपलक्षणम् । तृतीया तैः उपलक्षितान् घर्घराः अव्यक्तघोषाः । अव्यक्तवचनं यथा तथा घोषाः येषां तान् घर्घराव्यक्तघोषान् । जघौघैः पापसमूहैः । दीर्घं आयतं घ्रातं निश्वासा येषां ते तान् दीर्घघ्रातान् कुरूपादिमहाव्याधियुक्तान् । पुनरपि घटयति संपूर्णावयवान् करोतीत्यर्थः । अन्तर्हृदये द्विगुणा घृणा महती घृणा घन च घृणा तया निघ्ना अधीना "अधीनो निघ्न आयत्त" इत्यमरः । निघ्ना उपद्रवः निर्विघ्ना च समावृत्तिश्च अन्तर्द्विगुणघनघृणा निर्विघ्नवृत्तिर्यस्य सः अन्तर्द्विगुणघन-घृणानिघ्ननिर्विघ्नवृत्तिः तस्य । धर्माः उष्णाः अंशवो यस्य सः धर्मांशुः सूर्यः तस्य धर्मांशोः । सिद्धानां सङ्घाः समूहाः तैः सिद्धसङ्घैः सिद्धा इत्युप-लक्षणम् । यक्षगुह्यकरक्षोरगविद्याधरकिन्नरकिम्पुरुषमनुष्यादिसङ्घैः इत्यर्थः । दत्तः अर्घा येभ्यस्ते दत्तार्घाः । घृणय रश्मयः । वः युष्माकम् । शीघ्रमाशु अंहोविघातं पापविनाशं । विदधतु कुर्वन्तु । विपूर्वाद्दधाति करोतीत्यर्थः ॥

*சீர்ண-க்ராணாங்க்ரி-பாணீந்-வ்ரணி-பி-*
*ரபகநை;-கர்கரா-வ்யக்த-கோஷான்*
*தீர்காக்ராதாநகௌகை: புநரபி கடயத்-*
*யேக உல்லாகயன் ய: ।*
*கர்மாம்சோஸ்தஸ்ய வோऽந்தர் த்விகுணா-*
*கநக்ருணா-நிக்ந-நிர்விக்நவ்ருத்தே;*
*தத்தார்கா: ஸித்தஸங்கை:-விததது*
*க்ருணய: சீக்ரமம்ஹோ-விகாதம் ॥* 6

மிகக் கொடிய பாவத்தின் காரணமாக ஏற்படும் நோய் குஷ்டரோகம். (कुष्णातीति कुष्ठ) உடல் உறுப்புக்களைக் குறைக்கின்ற காரணத்தால் குஷ்டரோகம் எனப்பட்டது. இந்த நோயினால் குறைந்த மூக்கு, குறைந்த கை-கால்கள், இவற்றில் தோன்றும், புண்கள்-ரணங்கள், அதில் தோன்றும் சீழ், அதனால் பரவும் துர்நாற்றம். ஆகிய வினைகளையும்; அறிவினால் தோன்றுவது பேச்சு, இத்தகைய பேச்சில் தெளிவின்மை: சஞ்சலமான, திடமற்ற மனம்; (அறிவில் தோன்றும் ஊனம், மனதில் தோன்றும் ஊனம்) ஆகிய அனைத்து வியாதிகளையும் நீக்கி, தெளிவான பேச்சையும், உறுதியான உள்ளத்தையும் நோயற்ற வாழ்வையும் நல்குகின்றவன் சூரியன். இத்தகைய நோயாளிகளிடம் வெறும் வார்த்தைகளால் ஆறுதல் கூறுவது மட்டும் போதாது. சாதாரணமான பரிவை இரு மடங்காக்கிச் செயல்பட்டு, அந்த நோயாளிக்கும் பணிவிடை செய்வதற்கு இடைவிடா முயற்சி வேண்டும். அத்தகைய சூரியனை ஸித்த புருஷர்கள் அர்க்யம் கொடுத்து உபசரித்துக் கொண்டாடுகிறார்கள். அந்த சூரியனுடைய கிரணங்கள் உங்கள் பாவங்களைப் போக்கட்டும்.

இந்நூலாசிரியர் 'மயூர கவி'க்கு குஷ்டரோகம் இருந்ததாகவும், இக்கொடிய நோயிலிருந்து மீளவே 'சூரியசதகம்' என்ற இந்த நூலைப்பாடியுள்ளார் என்பதும் இலக்கிய உலகின் பொதுக்கருத்து. இக்கருத்துக்கு வலுவூட்டுவதாகவே இச்சுலோகத்தில் தொழுநோயாளிகளிடையே தோன்றும் நோய்களை வருணித்துள்ளார் என்பது தெளிவு. 'ஆதி' என்பது மனத்தைப் பற்றி வரும் நோய். வியாதி என்பது உடலைப் பற்றி வரும் நோய். இவ்விரண்டு வகை நோயையும் நீக்குகின்றவன் சூரியன் என்கிறார் கவி.

बिभ्राणा वामनत्वं प्रथममथ तथैवांशवः प्रांशवो वः

क्रान्ताकाशान्तराला स्तदनु दशदिशः पूरयन्तस्ततोऽपि ।

ध्वान्तादाच्छिद्य देवद्विष इव बलिनो विश्वमाश्वश्नुवाना:

कृच्छ्राण्युच्छ्रायहेलोपहसितहरयो हारिदश्वा हरन्तु ॥ ७

बिभ्राणा इति । उच्छ्रायया उन्नतया, हेलया लीलया, अन्तर्हसित: अनुकृत:, हरिर्विष्णुर्यैस्ते उच्छ्रायहेलोन्तर्हसितहरय: । प्रथमं वामनत्वं ह्रस्वत्वं, बिभ्राणा: धारयन्त: । अथ अनन्तरं । प्रांशव: दीर्घा: । तथैव क्रान्तं व्याप्तम् । आकाशस्यान्तरालं मध्यमं यैस्ते आक्रान्ताकाशान्तराला: । तदनु दशदिश: पूरयन्त: व्याप्तुवन्त: । ततोऽपि देवद्विष: सुरशत्रव: । बलिन इव ध्वान्तात् अन्धकारात् । आच्छिद्य आक्षिप्य । आशु शीघ्रम् विश्वं जगत् । अश्नुवाना: व्याप्नुवन्त: । हरित: अश्वा यस्य स: हरिदश्व: सूर्य: तस्येमे, हारिदश्वा: सूर्यसम्बन्धिन: । अंशव: युष्माकम् । कृच्छ्राणि दु:खानि हरन्तु ॥ ७

*பிப்ராணா வாமனத்வம் ப்ரதமமத*
*ததைவாம்சவ: ப்ராம்சவோ வ:*
*க்ராந்தாகாசாந்தராலா: ததநு*
*தசதிச: பூரயந்தஸ்ததோऽபி ।*
*த்வாந்தாதாச்சித்ய தேவத்விஷ இவ*
*பலிநோ விச்வமாச்வச்நுவாநா:*
*க்ருச்சாண்யுச்ராய ஹேலோபஹஸித-*
*ஹரய: ஹாரிதச்வா ஹரந்து ॥* 7

உதிக்கும் சூரியனைப் பார்க்கும் கவிஞர் உள்ளத்தில் ஒரு வியப்பு! உதயமாகும்போது சூரிய கிரணங்கள் ஒரு குறிப்பிட்ட அளவில்தான் பரவுகின்றன. ஆனால், இதே சூரியன் உச்சியை அடைந்தபோது அதன் கிரணங்கள் எங்குமே வியாபிக்கின்றனவே! இது போலத்தானே திருமாலின் அவதாரமான வாமனாவதாரமும், திரிவிக்ரம அவதாரமும் நடைபெற்றது! என்று சிந்திக்கின்றார். இதன்

விளைவாக சூரியனையும் திருமாலையும் இணைத்து கவி யுள்ளம் சிந்திக்கின்றது. கவிதையும் பிறக்கிறது.

ஒளிமிக்க சூரிய கிரணங்கள் உதிக்கும்போது சிறுசிறு கதிர்களாக வெளிப்படுகின்றன. பிறகு வானம் எங்கும் திக்குகள் பத்திலும் ஊடுருவி வளர்ந்து, இருட்டிலிருந்து பிரபஞ்சத்தை மீட்கின்றன. இது எப்படி எனில் வாமன னாக வந்த மஹாவிஷ்ணு, தேவர்களின் பகைவனான மஹாபலியிடமிருந்து யாசித்து திரிவிக்ரமனாக வளர்ந்து மூவுலகையும் மீட்டானே! அப்படி அந்தத் திரிவிக்ரமனை யும் விஞ்சி வளர்ந்துவிட்ட சூரியனின் கிரணங்கள் ஹரியைக் கூட பரிகசிக்கின்றனவே!

திதி குமாரனான பலிச்சக்ரவர்த்தி தேவர்களுக்குத் துன்பமிழைத்தான். அத்துன்பங்களிலிருந்து விடுதலை பெற, தேவர்கள் திருமாலிடம் முறையிட்டனர். இதன் காரணமாக திருமால் மஹாபலியிடம் மூன்றடி மண்ணை யாசிக்க அந்தணச் சிறுவனாக அவதரித்தார். அப்போது, வாமனனாக வந்த திருமால் தனது சக்திகளை வெளிப் படுத்தாமலேயே தோன்றினார். மூன்றடி மண்ணைத் தானமாகப் பெற்றதும், திரிவிக்ரமனாக வளர்ந்து மூவுல கிலும் வியாபித்து நின்று உலகைக் காத்தார். இதைப் போலத்தான் சூரியன் உலகைக் காக்க சிறுசிறு ஒளிக் கிரணங்களைப் பரப்பி 'இருள்' என்ற அசுரனை அழிக்க, உதய காலத்தில் வாமனன் போலத் தோன்றுகின்றான். நடுப்பகலில் திரிவிக்ரமன் போலத் தனது கிரணங்களை மூன்று உலகங்களிலும், (பத்துத் திசைகளிலும்) வியாபிக்கு மாறு பூர்ணமாகப் பரப்புகிறான். பொன்வண்ணமுடைய தேர்க்குதிரைகள் போன்ற சூரியனின் கிரணங்கள் உங்க ளுடைய கவலைகளை நீக்கியருளட்டும்.

**उद्गाढेनारुणिम्ना विदधति बहुलं येऽरुणस्यारुणत्वं**

**मूर्धोद्धूतौ खलीनक्षतरुधिररुचो ये रथाश्वाननेपु ।**

शैलानां शेखरत्वं श्रितशिखरशिखास्तन्वते ये दिशन्तु
प्रेङ्खन्तः खे खरांशोः खचितदिनमुखास्ते मयूखाः सुखं वः ॥ ८

उद्गाढेनेति । ये मयूखाः उद्गाढेन अत्यन्तं निबिडेन अत्यन्तोन्नतेन । अरुणस्य भावः अरुणिमा, तेन अरुणिम्ना अतिलोहितत्वेन । अरुणस्य सूर्यसारथेः "मिहिरारुण पूषणः" इत्यमरः । अरुणत्वं लोहितत्वम् । बहुलं सान्द्रम् । विदधति । मूर्ध्नः शिरसः उद्धूतिः उत्क्षेपणं तस्यां मूर्धोद्धूतौ खलीनेन अश्ववक्त्रक्षिप्तेन मुखयन्त्रेण क्षतं व्रणं तत्र रुधिरं रक्त तस्य रुगिव रुग्येषां ते खलीनक्षतरुधिररुचः । ये मयूखाः रथाश्वानामाननेषु । क्षिताः इति शेषः । शिखराणां शृङ्गाणाम् । शिखाः कोटयः । श्रिताः शिखर शिखाः यैः ते. श्रितशिखरशिखाः । ये मयूखाः । शैलानां पर्वतानाम् । शेखरत्वं मौलित्वम् । तन्वते कुर्वते । ते खे आकाशे । प्रेंखन्तः । खचितं रचितम् । दिनस्य मुखं दिवसप्रारम्भो यैस्ते खचितदिन-मुखाः ते । खरांशोः सूर्यस्य मयूखाः । सुखं युष्माकं दिशन्तु ॥ ८

உத்காடேநாருணிம்நா விதததி பஹுலம்
யே அருணஸ்யாருணத்வம்
மூர்த்தோத்தூதௌ கலீநக்ஷதருதிரருசோ
யே ரதாச்வாநநேஷு ।
சைலாநாம் சேகரத்வம் ச்ரிதசிகரி-சிகா-
ஸ்தந்வதே யே திசந்து
ப்ரேங்கந்த: கே கராம்சோ: கசிததிமுகா-
ஸ்தே மயூகா ஸுகம் வ: ॥ 8

உதிக்கின்ற செங்கதிரைப் பார்க்கும் கவியுள்ளத்திற்கு, சூரியன், இத்தகைய செம்மைக்கிரணங்களைத் திசையெங்கும் பரப்பக்காரணந்தான் என்ன? என்று சிந்திக்கின்றார்.

சூரியனின் சாரதி அருணனோ ! இயல்பாகவே சிவந்த மேனியுடையவன். இவனுக்கு மேன்மேலும் சிவப்பை, சூரியன் கொடுப்பதால்தான் இத்தகைய சிவப்பு, வான வெளியெங்கும் பரவியுள்ளதோ ? அல்லது சூரியன், தனது ரதத்தில் பூட்டியுள்ள குதிரைகளின் வேகத்தையடக்க, அவற்றின் வாய்களில் கடிவாளத்தைப் பொருத்தி இருப் பதின் காரணமாகவே வாய்களிலிருந்து வழியும் ரத்தப் பெருக்கின் தோற்றந்தான் இச்செம்மைக்குக் காரணமோ ? ஆஹா ! ... இதோ பர்வதங்களின் சிகரங்களுக்கு மேலே சென்று காட்சி நல்கும், சூரிய கிரணங்கள் மகுடத்திலுள்ள 'மாணிக்க மணி' போலல்லவா பிரகாசிக்கின்றன. இவை இப்போது வானவீதியில் செல்லப் புறப்பட் விட்டன, இவை புறப்பட்டுச் செல்வதால்தானே 'நாள்' (தினம்) என்பது உருவாகிறது. இத்தகை 'நாளை' உருவாக்குகின்ற சூரிய கிரணங்கள் உங்கள் அனைவருக்கும் சகல சுகங் களையும் நல்கட்டும்.

அருணன் சூரியனுக்குச் சாரதியாக விளங்குகின்றவன், இவன் 'சாரதியாக' விளங்குவதற்குரிய கதை மஹாபாரதத் தில் காணப்படுகிறது. ஒரு சமயம் ராகு சூரியனைப் பிடித்தபோது தேவதைகளில் எவருமே சூரியனுக்கு உதவ வில்லை. இதனால் மனம் வருந்திய சூரியன் அனைத்து உலகையும் எரித்துவிட தீர்மானித்தான். 'எதிர்பாராத நிலையில் உலகம் அழிந்துவிடும் ஆபத்தை' உணர்ந்த தேவர்கள், அருணனை சூரியனின் தேர்த்தட்டில் அமர்த்தி சாரதியாக்கினார்கள். அருணனின் மிகப்பெரும் தேஜஸ்ஸின் காரணமாகச் சூரியனும் சற்று ஒளி குன்றினானாம், அன்று முதல் சூரியனின் சாரதியாகவே அருணன் விளங்குகின்றான்' என்று மஹாபாரதத்தில் காணப்படுகிறது.

மேலும், இந்த நூலின் 44-49 ஆம் சுலோகங்களில் தேர்க்குதிரைகளின் வர்ணனைகள் பேசப்படுகின்றன. 45, 47, 92 ஆகிய சுலோகங்களில் சூரியனது குதிரைகள் மஞ்சள், வெளிர் மஞ்சள் நிறமுடையவை என்றும் பேசப் படுகின்றன.

दत्तानन्दाः प्रजानां समुचितसमयाकृष्टसृष्टैः पयोभिः
पूर्वाह्णे विप्रकीर्णा दिशि दिशि विरमत्यह्नि संहारभाजः ।
दीप्तांशोर्दीर्घदुःखप्रभवभवभयोदन्वदुत्तारनावो
गावो वः पावनानां परमपरिमितां प्रीतिमुत्पादयन्तु ॥ ९

अथ सूर्यस्यरश्मिनां धेनुसाम्यमाह दत्तानन्दाः इति । समुचितश्चासौ समयश्च कालश्च तस्मिन्नाकृष्टानि जलानि तत्सृष्टानि त्यक्तानि तैः समुचितसमयाकृष्टसृष्टैः । पयोभिर्जलैः । अन्यत्र क्षीरैः । दत्तः आनन्दः हर्षः यैस्ते दत्तानन्दाः प्रजानामित्यत्रान्वयः । पूर्वाह्णे प्रभाते दिशि दिशि प्रकारवचने द्विर्वचनम् । विप्रकीर्णा इतस्ततो गताः प्रातःकालीनानागता इत्यर्थः । तथा अह्नि दिवसे विरमति समाप्ति गते सति । संहारभाजः सङ्कोचभाजः । उभयत्र समानमेतत् । दीर्घं च दुःखं च प्रभवत्यस्मादिति प्रभवः कारणं दीर्घदुःखप्रभवश्चासौभवः संसारश्च तस्माद्भयं तदेवोदन्वान् । "उदधिः सिन्धुरि"त्यमरः । उत्तारस्तरणं तस्मिन् नावः यानपात्राणि(नौकाः)-दीर्घदुःखप्रभवभवभयोदन्वदुत्तारनावः । पावनानां पवित्राणां मध्ये परमुत्कृष्टाः रूपकमेतत् । दीप्ताः प्रकाशमानाः । अंशवः यस्य सः दीप्तांशुः सूर्यः तस्य दीप्तांशोः । गावः रश्मयः धेनवश्च । स्वर्गेषु "पशुवाग्वज्रधिङ्नेत्रघृणिभूजल"मित्यमरः । वः युष्माकम् । अपरिमितां सम्पूर्णाम् । प्रीतिमुत्पादयन्तु ॥ ९

*தத்தாநந்தா: ப்ரஜாநாம் ஸமுசிதஸமயா-*
*க்ருஷ்ட ஸ்ருஷ்டை; பயோபி:*
*பூர்வாஹ்நே-விப்ரகீர்ணா திசி திசி விரமத்-*
*யஹ்நி ஸம்ஹார பாஜ: ।*

தீப்தாம்சோ: தீர்கது:கப்ரபவபவபயோ-
தந்வதுத்தாரநாவோ
காவோ வ: பாவநாநாம்
பரமபரிமிதாம் ப்ரீதிமுத்பாதயந்து ॥ 9

சூரியனின் உதயத்தைக் காண்கிறார் கவி. சூரியன் தனது கிரணங்களைத் திசையெங்கும் பரப்புவதையும் காண்கிறார். இங்ஙனம் கிரணங்களைப் பரப்புவதன் காரணந்தான் என்ன? என்று சிந்திக்கிறார். அந்தச் சிந்தனையின் பயனாக விளைந்ததே இந்த சுலோகம்.

காலையில் சூரிய கிரணங்கள் திசைகளெங்கும் பரவி, மாலையில் அவை ஒடுங்கிக்கொள்கின்றன. வெண்மையான கிரணங்கள் பூமியிலுள்ள தண்ணீரை உறிஞ்சி, உரிய காலத்தில் மழையாகப் பொழிவித்து, மக்களுக்கு உண்ண உணவும், பருக நீரையும் அளிக்கின்றன. இதனால் உலக உயிர்கள் சுகமாக வாழ்கின்றன. இதுமட்டுமா? சம்சார சாகரத்தில் வெகுகாலம் உழன்று துன்பப்படும் உயிர்களுக்கு ஒரு தோணிபோலிருந்து அவர்களைக் காக்கின்றன. இத்தகைய சூரிய கிரணங்கள் அனைவருக்கும் அபரிமிதமான சுகங்களைக் கொடுக்கட்டும்,

இந்தச் சுலோகத்தில் गाव: என்ற சொல் மட்டும் சிலேடையாக பசுக்களையும், சூரிய கிரணங்களையும் குறிக்கிறது. பசுக்கள் உரிய காலத்தில் காலையிலும், மாலையிலும் பால் தந்து மக்களை மகிழ்விக்கின்றன. முற்பகலில் திசையெங்கும் மேயப்போகின்றன. மாலையில் வீடு வந்துசேர்கின்றன. அதுபோல, சூரிய கிரணங்களும், உரிய காலத்தில் கோடை நாட்களில் தண்ணீரை உறிஞ்சி மேகங்களில் சேமித்து — மழை நாட்களில் பொழிந்து மக்களுக்கு ஆனந்தத்தைக் கொடுக்கின்றன. காலையில் அவை (கிரணங்கள்) திசையெங்கும் பரவுகின்றன. மாலையில் அவை ஒடுங்குகின்றன. இவ்விதம் (गाव:) காவ: என்ற சொல்லின் பொருளான பசுக்களுக்கும், கிரணங்களுக்கும்

ஒத்தாற்போல் பொருள் கூறமுடிந்தாலும், அந்த அடைமொழிகளில் சிலேடை இல்லை. ஆயினும், அவற்றின் சொல்லமைப்பு இரண்டுக்கும் பொருத்தமாகவே இருக்கிறது. ஆகவே, இது சிலேடை அலங்காரமல்ல. இந்த சுலோகத்தை எடுத்தாண்ட ஆனந்தவர்தனர் சொற்களின் பொருள்கள் இரண்டுக்கும் ஒட்டுகின்ற முறையில் வியங்கியமாகத் தொனிக்கின்றன என்று த்வன்யாலோகத்தில் கூறுகிறார்.

**बन्धध्वंसैकहेतुं शिरसि नतिरसाबद्धसन्ध्याञ्जलीनां**
**लोकानां ये प्रबोधं विदधति विपुलाम्भोजषण्डाशयेव ।**
**युष्माकं ते स्वचित्तप्रथिमपृथुतरप्रार्थनाकल्पवृक्षाः**
**कल्पन्तां निर्विकल्पं दिनकरकिरणाः केतवः कल्मषस्य ॥ १०**

बन्ध इति । यस्य किरणाः शिरसि नतिर्नमस्कारः । तस्मिन् रसः अनुरागः । तेन आबद्धाः सन्ध्यायामञ्जलयो येषां तेषां नतिरसाबद्धसन्ध्याञ्जलीनाम् । लोकानां जनानाम् । लोकस्तु 'भुवने जने' इत्यमरः । बन्धः संसारबन्धः । तस्य ध्वंसो नाशः तस्मिन्नेकहेतुं मुख्यकारणम् । प्रबोधं सम्यग्ज्ञानम् । ये विदधति उत्पादयन्ति । अम्भोजानां पद्मानाम् । षण्डं समूहः । विपुलं महत् । तच्च तत् अम्भोजषण्डं तस्मिन् महती आशा अभिलाषः तया । विपुलाम्भोजषण्डाशयेव । विदधति कुर्वन्ति । स्वस्य चित्तं मनः, तस्य प्रथिमा पृथुत्वं तेन पृथुतरा महत्तरा, सा च सा प्रार्थना च, तस्याम् । कल्पवृक्षाः स्वचित्तप्रथिमपृथुतरप्रार्थनाकल्पवृक्षाः । ननु चित्तस्य पृथुत्वं कथम् ? बहुवि(ध)विषयाश्रितत्वेन चित्तस्य पृथुत्वमस्तीत्यर्थः । ते दिनकरकिरणाः । कल्मषस्य पापस्य । केतवः नाशहेतवः । युष्माकम् । निर्विकल्पं निर्विकारं क्रियाविशेषणम् । कल्पन्तां समर्थाः भवन्तु ॥ १०

பந்த-த்வம்லைகஹேதும் சிரஸி நதிரஸா-
பத்த ஸந்த்யாஞ்சலீநாம்
லோகாநாம் யே ப்ரபோதம் விதததி விபுலாம்-
போஜ ஷண்டாச யேவ ।
யுஷ்மாகம் யே ஸ்வசித்த ப்ரதிம ப்ருதுதர-
ப்ரார்த்நா-கல்ப-வ்ருக்ஷா:
கல்பந்தாம் நிர்விகல்பம் திநகர-கிரணா:
கேதவ: கல்மஷஸ்ய ॥ 10

சூரிய கிரணங்களை வழிபடுகின்றவர்களுக்குரிய பயன் பற்றி இந்த சுலோகத்தால் விளக்குகிறார் கவி.

ஸந்தியா காலங்களில் சூரியனை வழிபடுவது சிறப்புக் குரியது இக் காலங்களில் தலைமேல் கை குவித்துத் தொழும் அடியார்களின் கூப்பிய கரங்கள் தாமரை மொட்டைபோலக் காணப்படுகின்றன. சூரியனின் கிரணங்கள் அந்தத் தாமரை மொட்டுக்களை மலர்விப்பதைப் போல, அஞ்சலி செலுத்தும் அடியார்களுக்கு, சம்சார பந்தத்தை (பிறவிப் பெருந்தளை)க் கடக்கும் ஞானத்தை (பேரறிவை) அளித்து மலரச் செய்கின்றன. இது மட்டுமா ? அவர்களுடைய உள்ளத்தில் தோன்றும் அனைத்து விருப்பங்களையும், தனது கிரணங்கள் வாயிலாக கற்பக மரத்தைப்போல அருளுகின்றன. இத்தகைய சிறப்புமிக்க சூரிய கிரணங்கள் உங்களுடைய பாபங்களை அழிக்கட்டும்.

கற்பக விருக்ஷத்தின், அடியில் நின்று யார் எதை விரும்பினாலும், அவற்றையெல்லாம் அளிக்கும் தன்மை யுடையது என்பது புராணக் கொள்கை.

धारा रयोऽधनायापदि सपदि करालम्बभूताः प्रपाते
तत्त्वालोकैकदीपास्त्रिदिवपति[1]पुरप्रस्थितौ वीथ्य एव ।
निर्वाणोद्योगियोगिप्रगमनिजतनुद्वारि वेत्रायमाणा-
स्त्रायन्तां तीव्रभानोर्दिवसमुखसुखाः रश्मयः कल्मषाद्वः ॥ ११

1. "स्त्रिदशपति" इति पाठः B. 4961 / 3937.

धारा इति । धनाया नाम धनाशा । सैव आपत् तस्यां धनायापदि दुर्भिक्षापदीत्यर्थः । "अशनायो दन्या धनाया बुभुक्षापिपासा-गर्धेषु" इति निपातः । रायो धनस्य धाराः । भवन्तीतिशेषः । यद्वा आपदि अधनाय धनरहिताय पुरुषाय । रायो धनस्य । धाराः (भवन्ति) प्रपातः दुर्गतिः, तस्मिन् प्रपाते नरकपात इत्यर्थः । सपदि तदानीमेव करालम्बभूताः हस्तालम्बसाधनाः । तत्त्वस्य परमात्मतत्वस्य । आलोकः प्रकाशः । तस्मिन् एक दीपाः । यद्वा तत्त्वस्य घटपटादेः आलोके प्रकाशे मुख्यदीपाः । त्रिदिवस्य स्वर्गस्य पतिः इन्द्रः । तस्य पुरममरावती । तं प्रति प्रस्थितिर्गमनम् । तस्यां त्रिदिवपतिपुरप्रस्थितौ वीथ्य एव मार्ग एव निर्वाणं मोक्षः । "निर्वाणं सून्नामोक्षे विगमे गतमज्जन" इति यादवः । तस्य उद्योगः प्रयत्नः निर्वाणोद्योगोऽस्यास्तीति निर्वाणोद्योगी सचासौ योगी च तस्य प्रगमः गमनम् । निजा च सा तनुश्च निजतनुः, स्वकीयशरीरं सैव द्वाः द्वारमिव तस्मिन् । निर्वाणोद्योगियोगिप्रगमनिजतनुद्वारि । "उपमितं व्याघ्रादिभिः सामान्याप्रयोगः" इत्युपमित समासः । वेत्रमिवाचरन्तीति वेत्रायमाणाः । वेत्राणि राजभवनद्वारे अनभिमतपुरुषापसरणविधान-साधनानि । सूर्यमण्डलं भित्वा योगी व्रजतीत्यागमः । दिवसस्यमुखे सुखयन्तीति दिवसमुखसुखाः । तीव्रभानोः रश्मयः । वः युष्मान् । कल्मषात् पापात् । त्रायन्तां रक्षन्तु ॥ ११

*தாரா ராயோऽதநாயாபதி ஸபதி*
*கராலம்பபூதா: ப்ரபாதே*
*தத்வாலோகைக தீபா: த்ரிதிவபதிபுர-*
*ப்ரஸ்திதௌ வீத்ய ஏவ ।*
*நிர்வாணோத் யோகி யோகி ப்ரகம-*
*நிஜதநுத்வாரி வேத்ராயமாணா:*
*த்ராயந்தாம் தீவ்ர-பாநோ:-*
*திவஸமுகஸுகா: ரச்மய: கல்மஷாத்வ: ॥* 11

இந்த சுலோகத்தில் சூரிய கிரணங்கள் உலக மக்களுக்குச் செய்யும் நன்மைகளைக் கூறுகின்றார் கவி.

மனிதர்கள், தங்களது நிலையிலிருந்து 'தாழ்வுற்ற போது' அவர்களை கைகொடுத்துத் தூக்கி விடுகின்றன. இங்கு 'தாழ்வு' என்பது பொருளாதாரத்தினாலும், ஆரோக்யத்தினாலும் என்று விரிவடையும். பொருளாதாரத்தால் வீழ்ச்சியுற்றவர்களுக்கு தனமாகிய செல்வத்தைத்தொடர்ந்தளித்து அவர்களை உயர்த்திவிடுகின்றன. நோயினால் வீழ்ச்சியுற்றவர்களுக்கு, ஆரோக்யத்தைக் கொடுத்து அவர்களது வாழ்வில் உயர்நிலையை அடையச் செய்கின்றன இதன் காரணமாகவே आरोग्यं भास्करादिच्छेत् என்ற பழமொழியும் ஏற்பட்டது. பாரமார்த்திக தத்துவத்தை அறிய விரும்புகின்ற யோகிகள் முன்னேறும் போது அவர்களுடைய உள்ளத்தில் அறியாமை புகாதவாறு தடுக்கின்ற காவல்காரனின் பிரம்புகள் போன்றவை சூரிய கிரணங்கள். இது மட்டுமா? அவை சுவர்கம் போகின்றவர்களுக்குச் சாலையாகவே அமைகின்றன. புறமுதுகு காட்டாது போரிட்டு உயிர் துறந்த வீரனும், யோகமார்கத்தில் திறன்பெற்று மோக்ஷத்தையெட்டும் ஞானிகளும், இந்த சரீரத்தை விடுத்து உயிர் நீங்கும்போது அந்த ஜீவன் (உயிர்) சூரிய மண்டலத்தைக் கடந்தே (பிளந்தே) (सूर्यमण्डलभेदिनौ) சொர்கம் செல்கின்றனர் என்பது சாஸ்திரங்களின் முடிவு. இத்தகைய சிறப்பு வாய்ந்த சூரியனின் ஒளிக் கிரணங்கள் உங்களுடைய பாபங்களை நீக்கி உங்களைக் காக்கட்டும்.

प्राचि प्रागाचरन्त्योऽनतिचिरमचले चारु चूडामणित्वं
मुञ्चन्त्यो रोचनाम्बु प्रचुरमिव दिशामुच्चकैश्चर्चनाय ।
चाटूत्कैश्चक्रनाम्नां चतुरमविचलैर्लोचनैरर्च्यमाना-
श्चेष्टन्तां चिन्तितानामुचितमचरमाश्चण्डरोचो रुचो वः ॥ १२

प्राचीति । प्राचि प्राच्यां दिशि । अचले पर्वते । प्राक् पूर्वम् । अनतिचिरं कांश्चित् क्षणान् । चारु सुन्दरं यथा तथा । चूडायां मणिः तस्य भावस्तत्वं चूडामणित्वम् । आचरन्त्यः बिभ्राणा इत्यर्थः । दिशाम् । चर्चनाय लेपाय । प्रचुरं प्रभूतम् । उच्चकैः । गोरोचनाम्बु गोरोचनमिश्राम्बु मुञ्चन्त्य इव स्थिताः । चाटूनि प्रियकरणानि । तेषु उत्कैः "उत्क उन्मन उत्सुका" इत्यमरः । चक्रमिति नाम एषां ते चक्रनामानः तेषां चक्रनाम्नाम् । अविचलैः अनिमेषैः । लोचनैः अर्च्यमानाः । सवितुरुदये प्रियैः सह संयोगमाचरन्तीत्यादराद्दश्यमाना इत्यर्थः । अचरमाः अभिनवाः । चण्डानि तीव्राणि रोचींषि यस्य सः चण्डरोचिः सूर्यः । तस्य रुचः दीप्तयः "रोरि, इति रुलोपे, ढ्रलोपे पूर्वस्य दीर्घोऽणः" इति दीर्घः । वः युष्माकम् । चिन्तितानां मनोरथानाम् । उचितं अनुरूपं यथा भवति तथा । चेष्टन्तां प्रवर्तन्ताम् ॥ १२

*ப்ராசி ப்ராகாசரந்த்யோ-*
*அநதிசிரமசலே சாரு சூடாமணித்வம்*
*முஞ்சந்த்யோ ரோசநாப்பு*
*ப்ரசுரமிவ திசாம் உச்சகை: சர்ச்சனாய |*
*சாடுத்கைச்சக்ர நாம்நாம் சதுரமவிசலை:*
*லோசநைரர்ச்யமாநா:*
*சேஷ்டந்தாம் சிந்திதாநாம்*
*உசிதமசரமா: சண்டரோசீ ருசோ வ: ॥* **12**

சூரியன் கீழ்வானில் உதித்து வானவீதியில் பவனிவரத் தொடங்கிவிட்டான். மன்னனையோ, பெரியவர்களையோ நல்வரவு கூறி அழைக்குமுன் வீதிகளில் நீர்தெளித்து, மெழுகி, நறுமலர்களைக் கொண்டு அர்சித்து வரவேற்பது மரபு. இம்மரபையொட்டி, தனது கற்பனையைச் சுலோகமாக வடித்துள்ளார் கவி.

கிழக்குத் திசையிலுள்ள உதயகிரியின் சிகரத்தில் சுடர் விட்டுப் பிரகாசிக்கும் சூரியனின் கிரீடத்தில் (தலையில்) சூட்டியுள்ள அழகுவாய்ந்த சூடாமணிபோல சற்று நேரம் காட்சி நல்குகின்றன சூரியனின் கிரணங்கள். சற்று நேரத்தில் சூரியன் பவனிவரும் வானவீதியில் கோரோசனை கலந்த (மஞ்சளும் — கருப்புமான) தண்ணீரால், திசைகளாகிய பெண்களின் முகங்களில் கோரோசனைப் பூச்சைப் பூசுவது போலவும் காணப்படுகின்றன. அப்போது சக்ரவாகப் பறவைகள் தங்களது கண் பார்வையால் நன்றியுடன் அர்ச்சிப்பது போலவும் காட்சி நல்கும் சூரியனின் கிரணங்கள் உங்களது மன விருப்பங்களைப் பூர்த்திசெய்யட்டும்.

சக்கரவாகப் பறவைகளைக் காதற்பறவைகள் என்று இலக்கியவாதிகள் கூறுகின்றனர். இரவில் இப்பறவைகளுக்குக் கண்கள் தெரியாமையால் காதலர்களான இவை யொன்றையொன்று காணமுடியாமல் இரவு முழுதும் பிரிவுத் துன்பத்தால் அவதிப்படுமென்றும், சூரியன் உதயமான பின்னரே அவைகள் ஒன்றையொன்று சந்தித்து மகிழ்கின்றனவென்றும், தங்களுடைய மகிழ்ச்சிக்குக் காரணமான சூரியனை நன்றியுடன் காண்பது 'சூரியனைத் தன் கண் மலர்களால் அர்ச்சனை செய்வதாக'வும் கற்பனை செய்துள்ளார் கவி.

एकं ज्योतिर्दृशौ द्वे त्रिजगति गदितान्यब्जजास्यैश्चतुर्भि-

भूतानां पञ्चमं यान्यलममृतुषु तथा षट्सु नानाविधानि ।

युष्माकं तानि सप्तत्रिदशमुनिनुतान्यष्टदिग्भाञ्जि भानो-

र्यान्ति प्राह्णे नवत्वं दश दधतु शिवं दीधितीनांशतानि ॥१३

एकमिति ॥ यानि दीधितीनां दशशतानि दीधितिसहस्रम् । त्रयाणां जगतां समाहारः त्रिजगत् । तस्मिन् त्रिजगति । तद्धितार्थे-त्यादिना" उत्तरपदसमासः । "सङ्ख्यापूर्वो द्विगुरि"ति द्विगुसंज्ञा । "द्विगुरेकवचनमि"त्येकवचनम् । चतुर्भिः । अप्सु जातं अब्जं, तस्मिन् जातोऽब्जजो ब्रह्मा तस्य आस्यैः मुखैः । एकं ज्योतिः, सूर्यमेकं तेजः गदितम् । दृशौ लोचने द्वे गदिते । तथा भूतानां पृथिव्यप्तेजो-वाय्वाकाशानां मध्ये पञ्चममग्निः । रूपं ज्योतिस्तेजः गदितम् । तथा षट्सु वसन्तादिषु ऋतुषु । नानाविधानि नानाप्रकाराणीति गदितानि । एतदुक्तं भवति । यत्किञ्चित्सामान्यं तेजोरूपं तत्सर्वं गदितमिति । तिस्रो दशाः येषां ते त्रिदशाः देवाः, त्रिदशाश्च ते मुनयश्च सप्त च ते त्रिदशमुनयश्च तैर्नुतानि स्तुतानि । अष्ट च ताः दिशश्च ताः भजन्तीति प्राप्नुवन्तीत्यष्टदिग्भाञ्जि । प्राह्णे प्रभाते । नवत्वं प्रत्यग्रत्वम् । यान्ति गच्छन्ति । तानि भानोः । दीधितीनां किरणानाम् । दश शतानि । युष्माकम् । अलमत्यर्थम् । शिवं मङ्गलम् । दधतु पुष्णन्तु । एकमित्यारभ्य दशपर्यन्ताः सङ्ख्याशब्दाः द्रष्टव्याः ॥ १३

ஏகம் ஜ்யோதி: த்ருசௌ த்வே த்ரிஜகதி
கதிதாந்யப்ஜ-ஜாஸ்யை: சதுர்பி:
பூதாநாம் பஞ்சமம் யாந்யலம்ருதுஷு ததா
ஷட்ஸு நாநா விதாநி ।
யுஷ்மாகம் தாநி ஸப்த த்ரிசமுநிநுதாந்-
யஷ்ட-திக்பாஞ்ஜி பாநோ:
யாந்தி ப்ராஹ்ணே நவத்வம்
தச ததது சிவம் தீதிதீநாம் சதாநி ॥ 13

இந்த சுலோகத்தில் சூரியன் ஒன்று முதல் ஆயிரமாக உள்ளான் என்பதைக் கூறுமுகத்தான் ஒன்று முதல் பத்து வரையுள்ள எண்களை வைத்துப் பாடியுள்ளார் கவி.

சூரியன், உலகின் ஒரே ஜோதி இவன் உலகினருக்கு இரு கண்களாக விளங்குகின்றான். மேலும், மூவுலகிலும் வியாபித்துள்ளான். நான்முகனாகிய பிரம்மதேவனால் புகழப்படுகிறான். ஐம்பூதங்களிலொன்றான தீயாக (நிலம்-நீர்-தீ-காற்று-ஆகாயம்) விளங்குகின்றான். ஆறு ருதுக்களில் (வஸந்த-க்ரீஷ்ம-வர்ஷ சரத்-ஹேமந்த-சிசிர) ஆறு வகையான உருவைப் பெற்று விளங்குகின்றான். மரீசி-அத்ரி முதலிய ஏழு தேவரிஷிகளால் துதிக்கப்படுகிறான். எண்திசைகளிலும் பரவியுள்ளான். தினந்தோறும் புதியவனாக (நவ என்ற சொல் ஒன்பது என்ற எண்ணையும் - புதிய என்ற பொருளையும் தரும்)க் காட்சி நல்குகிறான். இத்தகைய சூரியனுடைய பத்து X நூறு — ஆயிரம் — ஆயிரக்கணக்கான) கிரணங்கள் உங்களுக்கு அனைத்து மங்கலங்களையும் நல்கட்டும்.

**आवृत्तिभ्रान्तविश्वाः श्रममिव दधतः शोषिणः स्वोष्मणेव**
**ग्रीष्मे दावाग्नितप्ता इव रसमसकृद्ये धरित्र्या धयन्ति ।**
**ते प्रावृष्यात्तपानातिशयरुज इवोद्वान्ततोया हिमर्तौ**
**मार्तण्डस्याप्रचण्डाश्चिरमशुभभिदेऽभीषवो वो भवन्तु ॥ १४**

आवृत्तीति ॥ आवृत्या प्रतिदिनसञ्चारेण भ्रान्तं विश्वं येषां ते आवृत्तिभ्रान्तविश्वाः । अथ श्रमं दधत इव स्थिताः । स्वस्य ऊष्मणा उष्णत्वेन । शोषिणः शोषमुपगता इव, ग्रीष्मे निदाघकाले । दावाग्निना वनाग्निना । तप्ता इव । वने च "वनवह्नि च दवो दाव" इत्यमरः । ये अभीषवः रश्मयः । "अभीषुः प्रग्रहे रश्माविॱत्यमरः । धरित्र्याः

धरण्याः "धरा धरित्री धरिणिः" इत्यमरः। रसं उदकम्। असकृत् बहुशः। धयन्ति पिबन्ति। प्रावृष्यां वर्षाकाले। आत्तपानातिशयत्वेन रुक् व्याधिः। आत्तः स्वीकृतः पानातिशयः तेन रुग्येषां ते आत्तपानातिशयरुज इव। उद्वान्तं उद्गीर्यमाणं तोयं यैस्तैः उद्वान्ततोयाः। हिमतौ अप्रचण्डाः मन्दाः ते। मार्तण्डस्य सूर्यस्य। "विकर्तनार्कमार्तण्डः" इत्यमरः। अभीषवः किरणाः। चिरं चिरस्य। वः युष्माकम्। अशुभं भिनत्तीत्य-शुभभित् तस्मै अशुभभिदे अमङ्गलनाशाय भवन्तु॥ १४

ஆவ்ருத்தி ப்ராந்த விச்வா: ச்ரமமிவ ததத:
சோஷிண: ஸ்வோஷ்மணேவ
க்ரீஷ்மே தாவாக்நி தப்தா இவ
ரஸமஸக்ருத்யே தரித்ர்யா தயந்தி।
தே ப்ராவ்ருஷ்யாத்த பாநாதிசய ருஜ
இவோத்வாந்த தோயா ஹிமர்தௌ
மார்த்தண்டஸ்யா ப்ரசண்டா; சிரமசுபபிதே-
அபிசவோ வோ பவந்து ॥ 14

இந்த சுலோகத்தில் சூரிய கிரணங்களைப் பார்த்த மயூர கவி அங்கலாய்க்கின்றார்,

சூரிய கிரணங்கள் ஓயாமல் சுற்றிக்கொண்டே இருக்கின்றன. இதனால் அவை களைத்துவிடுகின்றன. தம்முடைய வெப்பமே தாங்காமல் சுண்டியும் விடுகின்றன. கடுங்கோடையின் காரணமாக காட்டுத் தீ வேறு. காடுகள் பற்றி எறிகின்றன. இதனால், அந்தக் கிரணங்கள் மேலும் சுடுகின்றன. இதன் காரணமாக, அந்தக் கிரணங்கள் பூமியிலுள்ள தண்ணீரைப் பருகுகின்றன. தாபம் தாங்காமல் அளவுக்கு மீறி நீரையும் குடித்துவிடுகின்றன. கார்காலம் வந்ததும், தானுண்ட நீரைக் கக்குகின்றன, (அளவுக்கு அதிகமான நீரைப் பருகிவிட்டால்

அதனைக் கக்குவதைப் போல) இதனால் (கக்கியவன் சோர்ந்து விடுவதைப் போல) பனிக்காலத்தில் கிரணங்கள் (சோபையின்றி) சோர்ந்து விடுகின்றன. இவை சோபை (ஒளி) இழந்து போனாலும், அந்த சோபை இழந்த கிரணங்கள் உங்களுடைய அமலங்களைப் போக்கட்டும்.

तन्वाना दिग्वधूनां समधिकमधुरालोकरम्यामवस्था-
मारूढप्रौढिलेशोत्कलितकपिलिमालंकृतिः केवलैव ।
उज्जृम्भाम्भोजनेत्रद्युतिनि दिनमुखे किञ्चिदुद्भिद्यमाना
श्मश्रुश्रेणीव भासां दिशतु दशशती शर्म घर्मत्विषो वः ॥ १५

तन्वानेति ॥ दिश एव वध्वः तासां दिग्वधूनाम् । सम्यगधिकं मधुरः सुखकरः मधुरश्चासावालोकश्च । समधिकमत्यर्थम् । मधुरालोकः प्रकाशश्च तेन रम्या रमणीया तां समधिकमधुरालोकरम्याम् । अवस्थां दशाम् । तन्वाना कुर्वाणा । अगशताप्रौढेर्लेशः कणः, आरूढः उत्पन्नः, आरूढाश्चासौ प्रौढिलेशः तेन, उत्कलितः उद्भवः, कपिलिमा कपिलत्व सचाऽसौ कपिलिमा च, आरूढप्रौढलेशोत्कलितकपिलिमा, अलङ्कृतिः अलङ्कारो, यस्यास्सा आरूढप्रौढलेशोत्कलितकपिलिमालङ्कृतिः । उज्जृम्भाम्भोजनेत्रद्युतिनि । दिनमुखे प्रभाते । किञ्चिदुद्भिद्यमाना प्रकाशमाना । श्मश्रूणां श्रेणिरिव पङ्क्तिरिव स्थिता । घर्माः त्विषो यस्य सः घर्मत्विट् तस्य घर्मत्विषः । सूर्यस्य भासां तेजसां, दशानां शतानां समाहारः दशशतीः "पङ्क्तिविंशती"त्यादिना, उत्तरपदसमासः । सङ्ख्यापूर्वो द्विगुरिति द्विगुसंज्ञा । अकारान्तोत्तरपदोद्विगुस्त्रियां भाष्य इति स्त्रीलिङ्गत्वात् द्विगोरिति ङीप् । शर्म सुखम् । 'शर्मशातसुखानि'चेत्यमरः । केवलैव दिशतु ददातु ॥ १५

தந்வாநா திக்வதூநாம் ஸமதிக மதுரா-
லோகரம்யாம் அவஸ்தாம்
ஆரூட ப்ரௌடி லேசோத்கலித கபிலிமா-
லங்க்ருதி: கேவலைவ ।
உஜ்ஜ்ரும்பாம்போஜ நேத்ர த்யுதிநி
திநமுகே கிஞ்சிதுத்பித்யமாநா
ச்மச்ரு ச்ரேணீவ பாஸாம் திசது
தசசதீ சர்ம கர்ம த்விஷோ வ: ॥ 15

உதிக்கின்ற சூரியனைப் பார்க்கும் கவிஞருடைய கண்களுக்கு, அவனுடைய மென்மையான ஒளிக்கிரணங்கள், முகத்திலுள்ள விரிவடையும் ரோமாவளிபோலத் தென்படுகின்றன. அதனையே இங்கு உவமையாகச் சொல்கிறார்.

மனைவியரை மகிழச்செய்ய, அவளது கணவன் பட்டாடையை வாங்கிக் கொடுப்பான். அவளும் அவ்வாடையை அணிந்து புதுப்பொலிவுடனும், மகிழ்வுடனும் காட்சி தருவாள். அவளைக்கண்ட கணவன் அகமும் - முகமும் மலர்ச்சிபெற்று மகிழ்வான். அப்போது அவனது உதடுகளின் மேலுள்ள மீசையும் விரிவடையும். இத்தகைய உலகியலில் காணப்படும் தொடர் நிகழ்ச்சிகளையே இங்கு உவமையாகக் கூறுகிறார் கவிஞர். இங்கு கணவன் சூரியன், மனைவியர் திசைகள். ஆடை அவனுடைய மஞ்சள் வண்ண ஒளிக்கதிர்கள். ஆகவே, திசைகளாகிய மகளிரை பொலிவா (அழகாக)ச் செய்ய தனது மென்மையான மஞ்சள் வண்ண ஒளிக் கதிர்களை அவர்களுக்கு அணிவித்து அத்திசை மகளிரை அழகியராகச் செய்கிறான் சூரியன். இதனால் அகமகிழ்ந்த (கணவனாகிய) சூரியனின் முகம் தாமரை மலர் மலர்வதைப் போல மெல்ல மெல்ல மலர்ச்சியுற்று, அதனால் அவனது முகத்திலுள்ள மீசை (ரோமாவளி)யும் விரிவடைவதைப் போல மெல்ல மெல்ல விரிவடையும் சூரியனின் ஒளிக்கிரணங்கள் உங்களுடைய மாசுக்களை நீக்கி சுகங்களைக் கொடுக்கட்டும்.

இந்த சுலோகத்தில் ஒளிக்கு நிழல் உண்டு என்று கூறுகிறார் கவி. ஒளிமயமான கிரணங்களுடே ஒரு கருமை. பகல் விடியும்போது சூரிய கிரணங்கள் முற்றும் உண்டுருவாகு நிலையில் ஒரு நிழல். அதன் வழியே உதிக்கும் சூரியனை நேர்முகமாகப் பார்க்கமுடியும். இக் கருமையில்லாவிடில் நம்மால் நேரடியாகப் பார்க்க முடியுமா? முடியாது. அப்போது ஒளிப்பிழம்பான சூரியனின் முகத்தில் கரு கரு வென்று மீசை முளைத்தது போல கிரண நிழல்கள் தெரிகின்றன என்கிறார் கவி.

**मौल्लीन्दोरेषमोषेद्द्युतिमिति वृषभाङ्केन यः शङ्कितेन**
**प्रत्यग्रोद्घाटिताम्भोरुहकुहरगुहासुस्थितेनेव धात्रा ।**
**कृष्णेन ध्वान्तकृष्णस्वतनुपरिभवत्रस्नुनेव स्तुतोऽलं**
**त्राणाय स्तात्तनीयानपि तिमिररिपोः स त्विषामुद्गमो वः ॥ १६**

मौलीति ॥ तिमिरस्य अन्धकारस्य । रिपुः शत्रुः, तस्य तिमिररिपोः सूर्यस्य, त्विषां तेजसां । यः उद्गमः प्रादुर्भावः । मौलौ शेखरे इन्दुः, तस्य द्युतिं कान्तिं, न एषः मोषेत् इति मोषेदिति मुष्णीयादिति । वृषभाङ्केन शङ्करेण । शङ्कास्यास्तीति शङ्कितेन व्रीह्यादिभ्यश्चेति इतच् प्रत्ययः । यस्तुतः आकीर्यरश्मिनामिन्दुरश्मि-संहारं कृत्वा (आकीर्णरश्मिनः इन्दुरश्मिसंहारकारणत्वात्) वृषभाङ्क-स्येन्दुशेखरत्वाच्च शङ्का युज्यते । प्रत्यग्रं नवम् । उद्घाटितं विकसितं प्रत्यग्रोद्घाटितं च तत्, अम्भोरुहं च तस्य कुहरं मध्यमं, तदेव गुहा तस्यां सुस्थितेन सुखेन स्थितेनेव । धात्रा ब्रह्मणा स्तुतः । मुकुला-वस्थायां सुखासीनाभावात् सूर्योदये कमलविकासो भवति । तस्मात्सुस्थि-तेनेति युक्तम् । ध्वान्तं अन्धकारं तद्वत्कृष्णा स्वशब्दैः श्रीकृष्ण उच्यते । ध्वान्तं इव कृष्णा च स्वतनुश्च तस्याः । परिभवस्तिरस्कारः तस्मात् त्रस्नुना-भीरुकेन ध्वान्तकृष्णस्वतनुपरिभवत्रस्नुनेव स्थितेन कृष्णेन हरिणा । अलं

अत्यर्थम् । स्तुतः आदित्यरश्मीनां ध्वान्तपरिभवत्वात् । कृष्णशरीरस्य तत्समानत्वाच्च । त्वस्तुनेव युक्तः एषः तनीयान् अल्पः । तिमिररिपोः स त्विषामुद्गमो वः युष्माकम् । त्राणाय रक्षणाय । स्तात् भवतु ॥ २६

மௌலீந்தோரேஷமோஷேத்யுதிமிதி
व्रुஷபாங்கேந ய: சங்கிதேந
ப்ரத்யக்ரோத்காடிதாம்போருஹ-
குஹரகுஹாஸுஸ்திதேநேவ தாத்ரா ।
க்ருஷ்ணேன த்வாந்த-க்ருண-ஸ்வதநு-பரிபவ
த்ரஸ்நுநேவ ஸ்துதோ (அ)லம்
த்ராணாய ஸ்தாத்-தநீயாணபி திமிரரிபோ:
ஸ த்விஷாம் உத்கமோ வ: ॥ 16

இந்த சுலோகத்தால் ''சிவன், பிர்மன், விஷ்ணு ஆகிய மும்மூர்த்திகளாலேயே வழிபாடு செய்யப்படுகின்ற சிறப்பு வாய்ந்தவன் சூரியன்'' என்று சூரியனின் மஹிமையைச் சிறப்பித்துக் கூறுகிறார் கவிஞர்.

சூரியன் உதயமானதும் சந்திரனின் ஒளிகுன்றிவிடும் என்பது அனைவரும் அறிந்ததே. சிவபெருமான் தன்னுடைய சிரசில் பிறையைச் சூடிக்கொண்டு சந்திர சேகரனாகத் திகழ்கிறார் அல்லவா! அவர், தன்னுடைய சிரசில் அணியாகச் சூடிக்கொண்டுள்ள சந்திரனின் ஒளியை அபகரித்துவிடுவானோ? என்ற கவலையால் சூரியனைக் குறித்துத் தோத்திரம் செய்கின்றார். பிர்மதேவனோ! தாமரையாகிய கர்பவாசத்தில் மலர்வதன் முன்னம் (அதற்குள்) ஒடுங்கி அமர்ந்திருந்தார். மலர்ந்த உடன் சற்று தாராளமாக அமர்ந்துகொள்ள இடம் கிடைத்ததில் மகிழ்ச்சிகொண்டார். மஹாவிஷ்ணுவான திருமாலும், சூரியனைப் பிரார்த்தனை செய்கிறார். சூரியன் இருளை அழிக்கும் ஆற்றல் உள்ளவன் இருளுக்கு "கிருஷ்ண" (கருப்பு) என்றதொரு பெயருண்டு. அவர் உடலும் கருப்பு.

அதனால் "என் உடல் கருப்பாக இருக்கிறதே! இவ்வுடலை யும் அழித்துவிடுவானோ' என்ற அச்சங்கொண்டு சூரியனை ப்ரார்த்தனை செய்கிறான். உதிக்கின்ற நேரத்தில் மெல்ல மெல்லப் புறப்படும் மெல்லிய கிரணங்களே சிவனுக்குக் கவலையையும், பிர்ம்மதேவனுக்கு மகிழ்ச்சியையும், கிருஷ்ணனுக்குப் பயத்தையும் ஒருங்கே தருகின்றன. அதனாலே மூவரும் சூரிய கிரணங்களைத் துதிக்கின்றனர். இதனால் பிர்மாதி மூவர்களும் ப்ரார்த்திக்கும் சக்தி வாய்ந்த சூரியனின் கிரணங்களின் உதயம் உங்களைக் காக்கட்டும்.

विस्तीर्णं व्योम दीर्घाः सपदि दश दिशो व्यस्तवेलाम्भसोऽब्धीन्
कुर्वद्भिर्दृश्यनानानगनगरनगाभोगपृथ्वीं च पृथ्वीम् ।
पद्मिन्युच्छ्वास्यते यैरुषसि जगदपि ध्वंसयित्वा तमिस्रा-
मुस्रा विस्रंसयन्तु द्रुतमनभिमतं ते सहस्रत्विषो वः ॥ १७

विस्तीर्णमिति । व्योम आकाशम् । विस्तीर्णं विमलं कुर्वद्भिः । अब्धीन् समुद्रान् । व्यस्तं व्यस्ता विस्तारिता वेला अम्भसां ये ते व्यस्त-वेलाम्भसः । वेलायां अम्भः वेलाम्भो यैस्तान् व्यस्तवेलाम्भसः, यद्वा व्यस्ता त्यक्तावेला यैस्तानि व्यस्तवेलानि अम्भांसि येषां ते तान् व्यस्त-वेलाम्भसः । आदित्योदये समुद्रजलं सङ्कुचितं भवतीति प्रसिद्धम् । पृथ्वीं भूमिं च । च शब्दः समुच्चये । न गच्छन्तीति नगाः पर्वताश्च नगराणि पुराणि च नगाः वृक्षाश्च नानाविधाश्च ते नगनगरनगाश्च दृश्याश्च ते नानाविधनगराश्च तेषां, आभोगो विस्तारः । तेन पृथ्वीं महतीं कुर्वद्भिः । यैस्तैः किरणैः । उषसि प्रभाते । तमिस्रां रात्रिम् । "तमिस्रा-तामसीरात्रि"रित्यमरः । ध्वंसयित्वा नाशयित्वा । पद्मिनी कमलिनी । उच्छ्वास्यते विकास्यते । जगदपि अपिशब्दः समुच्चये । उच्छ्वास्यते

प्रबोध्यते । सहस्रं त्विषो यस्य सः सहस्रत्विट्, तस्य सहस्रत्विषः । उस्रा रश्मयः । वः युष्माकम् । अनभिमतं पापम् । द्रुतं क्षिप्रम् । विध्वंसयन्तु नाशयन्तु ॥ १७

விஸ்தீர்ணம் வ்யோம தீர்கா: ஸபதி தச திசோ
 வ்யஸ்தவேலாம்பஸோ அப்தீன்
குர்வத்பி:-ருச்யநாநா-நக-நகர-நகா-
 போக-ப்ருத்வீம் ச ப்ருத்வீம் ।
பத்மின்யுச் ச்வாஸ்யதே யைருஷஸி ஜகதபி
 த்வம்ஸயித்வா தமிஸ்ரா
முஸ்ரா விஸ்ரம் ஸயந்து த்ருதமநபிமதம்
 தே ஸஹஸ்ரத்விஷோ வ: ॥ 17

சூரியன் உதிக்கும்போது என்னென்ன நடைபெறுகிறது என்பதை விளக்குகிறார் இக் கவிதையால்.

(இருள் சூழ்ந்த) ஆகாயம் விரிகின்றது. திசைகள். நீள்கின்றன. கடற்கரையைத் தாண்டி நீர்பரப்பு விரிகின்றது. பூமியெங்கும் மலைகளும், நகரங்களும், பள்ளங்களும் தெரிகின்றன. தாமரைக்குளம் 'அப்பாடா' என்று பெருமூச்சுவிட்டு விம்மிதம் அடைகிறது. இருளைத் தொலைத்து நமக்கு வேண்டாதவற்றை அகற்றி அருளட்டும் சூரியனின் ஆயிரம் கிரணங்கள்.

अस्तव्यस्तत्वशून्यो निजरुचिरनिशानश्वरः कर्तुमीशो
 विश्वं वेश्मेव दीपः प्रतिहततिमिरं यः प्रदेशस्थितोऽपि ।
दिक्कालापेक्षयासौ त्रिभुवनमटतस्तिग्मभानोर्नवाख्यां
 यातः शातक्रतव्यां दिशि दिशतु शिवं सोऽर्चिषामुद्गमो वः ॥

अस्तव्यस्तत्वशून्य इति । अस्तः अन्योन्यपरिभूत । व्यस्तः अन्योन्य श्रितः । अस्तश्च व्यस्तश्च अस्तव्यस्तौ तयोर्भावस्तत्वं तेन । शून्यः रहितः । अनेकार्थत्वाद्धातूनां अयमर्थो लक्ष्यत इत्यदोषः । धातूनामनेकार्थत्वं कथम् ? उक्तं च – "निपाताश्चोपसर्गाश्च धातवश्च ते त्रयः । अनेकार्थाः स्मृताः सर्वैः पाठस्तेषां निदर्शन"मिति ॥ आदित्यस्यार्चिषामुद्गमः प्रादुर्भावः ।

अन्येन, तेजसा परिभूयते अन्येन तेजसा न मिश्रितश्च । दीपोऽपि नैवं, निजा अनुत्पाद्या, रुचिः कान्तिर्यस्य स. दीपोऽपि न नैवं, तैलवर्त्यग्नि-संयोगसम्भवरुचित्वात् । अनिशं सर्वदा । अनश्वरः अनाशनशीलः । यस्तिग्मभानोः सूर्यस्य अर्चिषामुद्गमः उदयः दीप इव । प्रदेशस्थितोऽपि उदयपर्वतस्थितोऽपि । अन्यत्र गृहकोणस्थितोऽपि । विश्वं वेश्म गृहं च । प्रतिहतं तिमिरमन्धकारं यस्य तत्प्रतिहततिमिरं कर्तुं सम्पादयितुम् । ईशः समर्थः । सकलजगदन्धकारापनोदनसमर्थ इत्यर्थः । दीपो गृहगतान्धकार नाशने समर्थः इत्यनेन दीपसूर्यतेजसां साधर्म्यवैधर्म्ये प्रतिपाद्येते । दिक्कालापेक्षया । शतं क्रतवो यस्य सः शतक्रतुः इन्द्रः । शतक्रतोरियं शातक्रतवी तस्यां शातक्रतव्याम् । "तस्येदमित्यण् प्रत्ययः" टिड्ढाणञ् इत्यादिना ङीप् ओर्गुणः इति गुणः अवादेशः । तद्धितेष्वचामादेरित्यादि-वृद्धिः । दिशि इति व्याख्यातः । नित्यस्य नवत्वोपपत्तिः भाव्या । नवत्वपृथिवीत्वादि धर्माः घटाकाशपटाकाशवदौपाधिकाः । त्रिभुवनमटतः गच्छतस्तिग्मभानोः सूर्यस्य सः असावर्चिषामुद्गमः । वः युष्माकम् । शिवं मङ्गलम् । दिशतु । असाविति प्रतीतः । यः पूर्वं मया काश्यां दृष्टः स एव काञ्च्यां दृष्टः इति वत्प्रत्यभिज्ञा ॥ १८

அஸ்தல்யஸ்தத்வ சூன்யோ நிஜருசி:
அநிசா நச்வர: கர்த்துமீசோ
விச்வம் வேச்மேவ தீப:
ப்ரதிஹத திமிரம் ய; ப்ரதேச ஸ்திதோபி ।
திக்காலாபேக்ஷயா (அ)ஸௌ
த்ரிபுவநமடத: திக்ம பாநோர்-நவாக்யாம்
யாத: சாத-க்ரதவ்யாம் திசிதிசது சிவம்
ஸோ (அ)ர்சிஷாம் உத்கமோ வ: ॥ 18

உதயமோ, அஸ்தமனமோ இல்லாதவன் சூரியன் என்பதை விளக்குகிறார் கவி.

**अस्तव्यस्तत्वशून्य:** அஸ்தமனம் என்பதோ வெளிப்பாடு என்பதோ இல்லாதவன் சூரியன். ஓரிடத்தில் இருந்து கொண்டே தன்னொளி பாயுமிடங்களில் எல்லாம் இரவை/இருளைப் போக்குகின்றான். ஒரு வீட்டின் நடுக்கூடத்தி லுள்ள விளக்கு அந்த வீட்டின் பிற பகுதிகளிலுள்ள இருளையோட்டுவதைப் போல, அண்டப்பெருவெளி (Universe)யெங்கும் பிரகாசித்து இருளையோட்கிறான் ஆனால், இரவும்-இருட்டும் எப்படி வருகிறது? சூரிய ஒளியை விட்டு மறைந்த திசை இருட்டாகவும், மறைந்த நேரம் இரவாகவும் உள்ளது. இதனாலும் ஒரு அனுகூல முண்டு, பூமியின் சுழற்சியினால் சூரியன் சஞ்சரிப்பதாக வும். திசையில் உதிப்பதாகவும். நாமாகக் கற்பித்துக் கொள்கிறோம். ஏன்? நமக்கு திசையும், காலமும் தெரிய வேண்டுமே! அதற்காக. 'இதோ! கீழ்த்திசையில் புதிய சூரியன்!' என்று கண்டு மகிழ்கிறோம். இத்தகைய நன்மை களையே நல்கும் சூரிய கிரணங்கள் உங்களுக்கு (மேன்மேலும்) நன்மையை அருளட்டும்.

मा गान्ग्लानिं मृणालीमृदुरिति दययेवाप्रविष्टोऽहिलोकं
लोकालोकस्य पार्श्वं प्रतपति न परं यस्तदाख्यार्थमेव ।

ऊर्ध्वं ब्रह्माण्डखण्डस्फुटनभयपरित्यक्तदैर्घ्यो द्युसीम्नि
स्वेच्छावश्यावकाशावधिरवतु स वस्तापनो रोचिरोघः ॥ १९

तपनस्यायं तापनः सूर्यसम्बन्धिः तस्येदमित्यप्रत्ययः । रोचिषामोघः रोचिरोघः । मृणालीवत् पद्मिनीवत् । मृदुः अहिलोकः । मा, ग्लानिमागादिति विशुष्कलतां न गच्छत्विति दययेव । अहीनां सर्पाणाम् । लोकः पाताललोकः । न प्रविष्टः । लोक्यत इति लोकः । लोकश्चासावलोकश्च तस्य लोकालोकस्य । लोकालोकपर्वतः । जलधीन् द्वीपानावृत्य तिष्ठतीति पुराणप्रसिद्धम् । परं पार्श्वं पाश्चात्यभागम् । तस्य लोकालोकपर्वतस्य आख्या नामधेयमर्थः प्रयोजनं यस्मिन् कर्मणि, तत्तथातदाख्यार्थमिति । लोकालोकपर्वतस्यान्वर्थोयथा स्यादिति । न प्रतपति न प्रकाशयतीति । लोकालोकपर्वतस्य पाश्चात्यभागं प्रकाशयेच्चेल्लोकालोकेत्याख्यानम् । द्युसीम्नि स्वर्गसीम्नि । ऊर्ध्वं उपरि ब्रह्मणःअण्डं तस्य खण्डं अर्धस्फुटनं तस्माद्भयं तेन परित्यक्तं दैर्घ्यं येन सः ब्रह्माण्डखण्डस्फुटनभयपरित्यक्तदैर्घ्यः उक्तः देवप्रयोजनस्तिर्यगूर्ध्वमधश्च न प्रवर्तत इति । स्वेच्छया, आत्मवाञ्छयावश्यः अविधेयः । अवकाशः प्रदेशः । अवश्यश्चासाववकाशश्च, तस्य अवधिः मर्यादा यस्य सः स्वेच्छावश्यावकाशावधिः स तापनो रोचिरोघः । वः युष्मान् । अवतु रक्षतु ॥ १९

மா காந்க்லாநிம் ம்ருணாளீ-ம்ருதுரிதி தயயா
அப்ரவிஷ்டோ (அ)ஹிலோகம்
லோகாலோகஸ்ய பார்ச்வம்
ப்ர-தபதி ந பரம் யஸ்ததாக்யார்த்த-மேவ ।
ஊர்த்வம்-ப்ரஹ்மாண்டகண்டஸ்புடந-பய-
பரித்யக்ததைர்க்யோ த்யுஸீம்நி
ஸ்வேச்சாவச்யாவகாசா - வதிரவது ஸ
வஸ்தாபநோ ரோசிரோத: ॥ 19

# சூரிய ஒளி வர்ணனை

சூரியன் எங்கும் ப்ரகாசிக்கும் ஆற்றல் பெற்றிருந்த போதிலும், சிற்சில இடங்களில் அவன் ப்ரகாசிப்பதில்லை. அவன் ப்ரகாசிக்காமல் இருப்பதின் காரணத்தை இச் சுலோகத்தின் வாயிலாகப் புலப்படுத்துகின்றார் கவிஞர்.

தாமரைத் தண்டு போலக் குளிர்ந்த. மென்மையான நாகங்கள், தனது கிரணங்களின் சூடுபட்டால் வாடிவிடுமே என்ற கருணையினாலோ என்னவோ பாதாளத்தில் சூரிய கிரணங்கள் பரவுவதில்லை 'லோகம்' என்றால் கண்களுக் குப் புலப்படுவது. 'அலோகம்' என்றால் கண்களுக்குப் புலப்படாதது. பரமன் தன் படைப்பில் 'அலோகம்' என்ற பகுதியையும் படைத்திருப்பதால் - அங்கு தன் கிரணங்கள் பரவினால் அதன் பெயர் கெட்டுவிடுமே! என்ற காரணத்தினால், அதன் பக்கம் சூரிய கிரணங்கள் பரவுவதில்லையோ! சூரிய கிரணங்களின் நீட்டத்திற்கு எல்லை கிடையாதுதான். ஆனால் அப்படி 'நீண்டு கொண்டே போய் பிர்ம்மாண்டத்தின் வான்முகட்டை உடைத்துவிடக்கூடாதே' என்ற அச்சத்தில் சூரிய கிரணங் கள் அதுவரை நீள்வதில்லை. தங்கு தடையில்லாத தன் கிரணங்களை இப்படி தன் விருப்பம் போல் அடக்கிக் கொள்ளும் 'சூரிய ஒளி' உங்களைக் காக்கட்டும்.

இங்கு 'லோகாலோகம்' என்றதொரு இடத்தைக் குறிப்பிடுகின்றார் கவிஞர். இது பற்றி புராணங்களில் பரவலாகக் காணப்படுகிறது. அதன்படி 'லோகாலோகம்' என்பது ஒரு மலையின் முன்பகுதி பின்பகுதி என்றும், விரிவடைந்த இந்த நிலத்தை ஆகாயத்திலிருந்து பிரிக்கிறது என்றும், இங்கு ஒரு பகுதியில் சூரியனின் பிரகாசம் உண்டு என்றும், மற்றொரு பகுதியில் சூரியன் பிரகாசிக்காது என்றும், அப்பகுதி இருள்மயமாகவே இருக்குமென்றும் காணப்படுகிறது. இதன் காரணமாகவே லோகம் சூரியனால் காணப்படும் (பிரகாசிக்கப்படும்) பகுதியென்றும், அலோகம் காணப்படாத (பிரகாசமில்லாத) பகுதியென்றும்

मूर्ध्न्यद्रेर्धातुरागस्तरुषु किसलयो विद्रुमौघः समुद्रे
दिङ्मातङ्गोत्तमाङ्गेष्वभिनवनिहितः सान्द्रसिन्दूररेणुः ।
सीम्नि व्योम्नश्च हेम्नः सुरशिखरिभुवो जायते यः प्रकाशः
शोणिम्नासौ खरांशोरुषसि दिशतु वः शर्म शोभैकदेशः ॥ ४१

मूर्ध्नीति ॥ शोभायाः एकदेशो यस्य सः शोभैकदेशः, अत्यल्पदीप्तिरित्यर्थः । खरांशोः सूर्यस्य असौ यः प्रकाशः । उषसि प्रभाते, व्योम्नः आकाशस्य सीम्नि हेम्नः सुवर्णसम्बन्धिनः सुरशिखरी मेरुः तस्य, भुवः भूमिः, स्थलं तस्याः सुरशिखरिभुवः सुमेरुप्रदेशात् । शोणिम्ना लोहितत्वेन, अद्रेः पर्वतस्य, मूर्ध्नि शिरसि, धातोः रागः, तरुषु किसलयः, समुद्रेऽब्धौ "समुद्रोऽब्धिरकूपार" इत्यमरः । विद्रुमाणामोघः समूह इव मतङ्गाज्जाताः मातङ्गाः दिक्षु मातङ्गाः गजाः तेषां, उत्तमाङ्गेषु मूर्धसु, अभिनवं प्रत्यग्रं यथा भवति तथा, निहितः क्षिप्तः सान्द्रसिन्दूररेणुरिव, जायते । इवशब्दाभावाल्लुप्तोपमा । सः वः युष्माकं, शर्म शिवं, मङ्गलं, दिशतु ददातु ॥ ४१

மூர்த்நயத்ரே: தாதுராக: தருஷு கிஸலயோ
வித்ருமௌக: ஸமுத்ரே
திங்மாதங்க உத்தமாங்கேஷு
அபிநவநிஹித: ஸாந்த்ர ஸிந்தூர ரேணு: ।
ஸீம்நி வ்யோம்நஶ்ச ஹேம்ந:
ஸுரசிகரிபுவோ ஜாயதே ய: ப்ரகாச:
சோணிம்னாஸௌ கராம்சோருஷஸி
திசது வ: சர்ம சோபைக தேச: ॥ 41

செவ்விய ஒளிக்கிரணங்களால் திசையெங்கும் சிவந்து காணப்படுகின்றது. தனக்குத் தெரிந்த சிவப்பு வண்ணப் பொருட்களுடன் இந்தச் சூரியனின் செம்மை வண்ணத்தை யும் ஒப்பிட்டுப் பார்க்கிறார் கவி. எந்தப் பொருட்களும் இதற்கு ஒப்புமையாகவில்லை என்று தெளிந்தார். அவர் ஒப்புமையாகச் சுட்டும் பொருட்களின் வரிசையை இந்தச் சுலோகத்தால் அறியலாகும்.

காலை இளஞ்சூரியன் தனது செவ்வொளியை எங்கும் பரப்பி, உலகையே அழகுறச் செய்கிறார். அவனது செவ்வொளியின் ஒருபகுதி மேலேபடுவதின் காரணமாக மேருமலையில் காணப்படும் நற்செங்கற்பொடியும், மரம், செடி, கொடிகளில் அரும்பும் இளந்தளிர்களும், கடலில் விளையும் பவழங்களும், திசை யானைகளின் மத்தகங்களில் அர்ச்சிக்கப்பட்ட சிந்தூரமும், மேருமலையின் முகட்டில் காணப்படும் தங்கப் பாளங்களும், தமது வண்ணங்களை ஒளிமயமாக்கிக் கொள்கின்றன. அத்தகைய சூரியனின் செவ்வொளியின் ஒருபகுதி அனைத்து மங்களங்களையும் நல்கட்டும்.

இங்கு சுட்டப்படும் நற்செங்கற்பொடி, இளந்தளிர், நற்பவழம், யானைகளின் மத்தகங்களில் தூவப்படும் சிந்தூர வண்ணப்பொடி ஆகியவை தனித்தனியே ஒவ்வொரு அழகைக் கொடுக்கும் செம்மை வண்ணத்தைக் கொண்டவை. எனினும், ஒவ்வொன்றின் காந்தியும் (ஒளியும்) சூரியனின் ஒளியினால்தான் பொலிவு பெறு கின்றன. இத்தகைய செம்மை வண்ணங்களின் சமஷ்டி யானது சூரியனின் அழகிய செவ்வொளி எனக் குறிப்பிடு கிறார் கவி.

अस्ताद्रीशात्तमाङ्गे श्रितशशिनि तमःकालकूटे निपीते
याति व्यक्तिं पुरस्तादरुणकिसलये प्रत्युषःपारिजाते ।

उद्यन्त्यारक्तपीताम्बरविशदतरोद्वीक्षिता तीक्ष्णभानो-
लक्ष्मीर्लक्ष्मीरिवास्तु स्फुटकमलपुटोपाश्रया श्रेयसे वः ॥ ४२

अस्ताद्रीशोत्तमाङ्ग इति ॥ अस्ताद्रिरेव ईशः शिवः तस्य, उत्तमाङ्गं शिरः तस्मिन् अस्ताद्रीशोत्तमाङ्गे श्रितशशिनि सति तम एव कालकूटं तस्मिन् । तमःकालकूटे निपीते सति, पिबति सति, अरुणाः रक्ताः किसलायाः पल्लवाः यस्य तस्मिन् अरुणकिसलये पारिजातस्य व्यक्ति, स्फुटतां याति गच्छति सति तीक्ष्णभानोः सूर्यस्य या लक्ष्मीः शोभा प्रत्युषः, "अव्ययं विभक्ती"त्यादिना सप्तम्यर्थेऽव्ययीभावः । आरक्तात् प्राग्भागात् उद्यन्ती आसमन्ताद्रक्तं आरक्तं च तत् पीतं अम्बरमाकाशम् । आरक्तपीतं च तत् अम्बरं, वासश्च तेन । विशदतरमुद्वीक्षिता यद्वा आरक्तं ईषद्रक्तं, पीताम्बरं वासो यस्य सः पीताम्बरः । श्रीकृष्णश्चासौ पीताम्बरश्च तेन, विशदतरमुद्वीक्षिता । स्फुटानि विकसितानि कमलानां पुटानि दलानि स्फुटानि च तानि कमलपुटानि च । तेषु तेषु उपाश्रयो मैत्री यस्यास्सा स्फुटकमलपुटोपाश्रया । अन्यत्र स्फुटानि च तानि कमलानीव तेषां पुटानि आश्रयो यस्यास्सा स्फुटकमलपुटोपाश्रया । तीक्ष्णभानोः सा लक्ष्मीः शोभा लक्ष्मीरिव हरिप्रियेव । वः युष्माकं । श्रेयसे अस्तु ॥ ४२

அஸ்தாத்ரீச உத்தமாங்கே சிரித
சசிநி தமः காலகூடே நிபீதே
யாதி வ்யக்திம் புரஸ்தாத் அருணகிஸலயே
ப்ரத்யுஷः பாரிஜாதே ।
உத்யந்த்யாரக்த பீதாம்பர விசத-
தரோத் வீக்ஷிதா தீக்ஷ்ண பாநோः
லக்ஷ்மீः லக்ஷ்மீரிவாஸ்து
ஸ்புடகமலபுடோபாச்ரயா ஸ்ரேயஸே வः ॥ 42

இந்த சுலோகத்தால் "சூரியனிடமும் ஒரு லக்ஷ்மி உண்டாகிறாள்" என்கிறார் கவி.

பாற்கடலைக் கடைந்து அமுதமெடுத்த கதை நமக்குத் தெரியும். அதில் தோன்றிய காலகூட விஷத்தை சிவபெருமான் பருகினார். அதற்குப் பரிசாகப் பெற்ற கடலில் உதித்த சந்திரனை தன் முடியில் சூடிக்கொண்டார். அடுத்து பாரிஜாதமரம் கடலில் உண்டாயிற்று. பிறகு லக்ஷ்மி உண்டானாள்.

அதுபோல, சூரியனிடமும் ஒரு லக்ஷ்மி உண்டாகிறாள். எப்படி? ... சந்திரன் அஸ்தமனகிரிமேல் சேர்ந்துவிட்டான். இருள் என்ற காலகூடம் (விஷம்) மறைந்துவிட்டது. சிவப்புத்தண்டுள்ள பாரிஜாத மலர்கள்போல, இளஞ் சிவப்புத் தண்டும் முன்வெளுப்பு இதழ்களுமாக முன்காலை விரிகின்றது, அப்போது ஒரு லக்ஷ்மீ உண்டாகிறாள். இளஞ்சிவப்பான, பீதாம்பரம் அணிந்த அலர்மேல்மங்கை யான மஹாலக்ஷ்மிபோல — மலர்ந்த தாமரைகளின்மீது காணப்படும் பீதாம்பரப் பட்டொளியான "காலைக்கதிர்" என்ற லக்ஷ்மீ உங்களுக்கு மேன்மையளிக்கட்டும்.

नोदन्वाञ्जन्मभूमिर्न तदुदरभुवो बान्धवाः कौस्तुभाद्याः
यस्याः पद्मं न पाणौ न च नरकरिपूरःस्थले वासवेश्म ।
तेजोरूपा परैव त्रिषु भुवनतलेष्वादधाना व्यवस्थां
सा श्रीः श्रेयांसि दिश्यादशिशिरमहसो मण्डलाग्रोद्गता वः ॥ ४३

नोदन्वानिति ॥ अशिशिरं उष्णं, महत् तेजः यस्य सः अशिशिरमहः, तस्य अशिशिरमहसः । सूर्यमण्डलात् उद्गता या यस्याः श्रियः । उदन्वान् समुद्रः, "उदन्वानुदधौ चे"ति निपातनात्साधुः । "उदन्वानुदधिःसिन्धु"रित्यमरः । जन्मभूमिः जन्मस्थानं न एतावत्याः

श्रियः जन्मभूमिः । तस्य समुद्रस्य, उदरभुवः मध्यात् उत्पन्नाः, कौस्तुभाद्याः कौस्तुभप्रभृतयः । आद्य शब्देन ऐरावतपारिजातादयः गृह्यन्ते । बान्धवा न सन्ति । अन्यत्र, बान्धवाः । यस्याः पाणौ हस्ते, पद्मं न अन्यत्र अस्ति नरकरिपुः कृष्णः, तस्य उरस्थले । उरस्थलं वासवेश्म निवासगृहम् । त्रिषु भुवनतलेषु व्यवस्थां अग्निहोत्राद्ध्यायिनां अनुष्ठान-मर्यादाम् । आदधाना, अन्यत्रोदयस्थानं, आदधाना । अशिशिरमहसः सूर्यस्य मण्डलात् सूर्यबिम्बाग्रात् । उद्गता आविर्भवन्ती तेजोरूपा परा उत्कृष्टा सा श्रीः । वः युष्माकम् । श्रेयांसि दिश्यात् ॥ ४३

इति गोपीनाथसूरिविरचितायां प्रभावलीसमाख्यायां
सूर्यशतकटीकायां रश्मिवर्णनं समाप्तम् ॥

நோ தந்வான்ஜன்மபூமி; ந கதுதரபுவோ
 பாந்தவா: கௌஸ்துபாத்யா:
யஸ்யா: பத்மம் ந பாணௌ
 ந ச நரகரிபுர:ஸ்தலீ வாஸவேச்ம ।
தேஜோரூபா பரைவ த்ரிஷு புவநதலே-
 ஷ்வாததாநா வ்யவஸ்தாம்
ஸா ஸ்ரீ: ச்ரேயாம்ஸி திச்யாதசிசிரமஹஸோ
 மண்டலாக்ரோத்கதா வ: ॥ 43

முன் சுலோகத்தில் (42) தொடர்ச்சி.

சூரியனின் ஒளியான லக்ஷ்மீ. நாம் வணங்கும் லக்ஷ்மியைக் காட்டிலும் வேறுபட்டவள். 'சூரியனின் ஒளி' என்ற லக்ஷ்மீ வேறெங்கேயோ கடலில் பிறந்தவள் அல்ல. சூரியனிடமே உண்டானவள். கடலில் பிறந்த கௌஸ்துபம் முதலியவை சூர்ய லக்ஷ்மிக்கு உடன்பிறந்தவைகளல்ல. அவளுடைய கைகளில் தாமரைகள் இல்லை. அவள்

வசிப்பதும் ஸ்ரீநிவாஸன் மார்பில் அல்ல. மற்றொரு சிறப்பு என்னவென்றால், அந்த லக்ஷ்மி (செல்வம்) புகுந்த இடங்களில் கட்டுப்பாடுகளைக் குலைத்து விடுவாள். செருக்கினால் செல்வம் படைத்தவர்கள் தர்ம நெறி மீறுவதை நாம் பார்க்கிறோம் ஆனால் சூரியனுடைய லக்ஷ்மி கட்டுப்பாடுகளை — எட்டு கிரஹங்களின் (சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்ரன், சனி, ராகு, கேது) ஸஞ்சாரத்தை முறைப்படுத்தி உலகில் பகல், இரவு, சுக்ல பக்ஷம், கிருஷ்ண பக்ஷம், மாதம், அயனம் முதலிய காலக் கணிப்புக்களைத் தவறாமல் நடத்தி வைப்பவள். அத்தகைய சூரிய மண்டலத்தின் உச்சியில் உண்டாகும் லக்ஷ்மீ உங்களுக்கு மேன்மையை அளிக்கட்டும்.

## ॥ अथ रथाश्ववर्णनम् ॥

रक्षन्त्वक्षुण्णहेमोपलपटलमलं लाघवादुत्पतन्तः
पातङ्गाः पङ्क्तवज्ञाजितपवनजवा वाजिनस्ते जगन्ति ।
येषां वीतान्यचिह्नोन्नयमपि वहतां मार्गमाख्याति मेरा-
वुद्यन्नुद्दामदीप्तिर्द्युमणिमणिशिलावेदिकाजातवेदाः ॥ ४४

संपूर्णं भास्करस्यांशुवर्णनं मोक्षसाधनम् ।
रथाश्ववर्णनं तस्य क्रियते कविना ततः ॥

टीका प्रभावली नाम गोपीनाथेन निर्मिता ।
तदर्थज्ञानमखिलं भासतां सुहृदां हृदि ॥

रक्षन्त्विति ॥ उद्दामदीप्तिः अनिवारितकान्तिः द्युमणिः सूर्यः, "द्युमणिस्तरणिः" इत्यमरः । तस्य मणिशिलाः सूर्यकान्तमणयः । ताभिः वेदिका चतुरश्रा तस्यां जातवेदाः वह्निः त्रेता उद्यन् वीतः । विगतः अन्यश्च तत् चिह्नं च, तस्य उन्नयः निश्चयः वीतान्यचिह्नोन्नयः यस्मिन् कर्मणि ।

वीतान्यचिह्नोऽन्वयमपि वहतां गच्छतां मार्गं आख्याति सूचयति । अक्षुण्णं अचूर्णितं हेमोपलानां सुवर्णशिलानां पटलं समूहः अक्षुण्णहेमोपलं पटलं यस्मिन् कर्मणि तत् अक्षुण्णहेमोपलपटलम् । अलं अत्यर्थम् । लाघवात् लघुत्वात् । उत्पतन्तः उद्गच्छन्तः । पङ्गुः अनूरुः । अवज्ञा तर्जनं तया जितः पवनजवो वेगो येषां ते पङ्ग्ववज्ञाजितपवनजवाः । पातङ्गाः सूर्यसम्बन्धिनः । ते वाजिनः जगन्ति रक्षन्तु पालयन्तु ॥ ५४

## இனி சூரியனின் தேர்குதிரைகளின் வர்ணனை

ரக்ஷந்த்வக்ஷுண்ண ஹேமோபல-
பட்லமலம் லாகவாதுத் பதந்த;
பாதங்கா: பங்க்வவக்ஞாஜிதபவநஜவா
வாஜிநஸ்தே ஜகந்தி ।
யேஷாம் வீதான்ய சின்ஹோன்வயமபி
வஹதாம் மார்கமாக்யாதி மேரௌ-
உத்யன்னுத்தாம தீப்திர் த்யுமணி-
மணிசிலா வேதிகா ஜாதவேதா; ॥ 44

மிகவும் சுவாரசியமான சுலோகமிது: மேரு பர்வதத்தைச் சுற்றி வருகிறான் சூரியன். அவனுடைய தேரை ஓட்டி வருகின்ற அருணனோ ஒரு நொண்டி, அவன் ஓட்டுகின்ற குதிரைகளுக்கு வேகமேது? — என்று அலட்சியம் செய்கிறான் வாயுதேவன். ஆனால் 'குதிரைகள் நொண்டிகள் அல்ல' என்பதை அவன் நினைக்கவில்லை. காற்றையும் வென்றுவிடுகின்றன சூரியனுடைய குதிரைகள். அந்தக் குதிரைகள் அப்படி ஓடும்போது புழுதி பறப்பதில்லை. மேருமலையைச் சுற்றி தங்கம் அல்லவா பாளம் பாளமாகப் பதிந்திருக்கின்றது. அது மசிந்து கொடுக்குமே தவிர தூள் பறக்கவிடாதே! சூரியன் போகும் பாதை என்ன? அதற்கு ஏதாவது அடையாளத் தூண்கள் நடப்பட்டிருக்கின்றனவா? இல்லையே! ஆனால் தினந்தோறும்

அதே பாதையில் சூரிய ரதம் எப்படிப் போகிறது? அவனுடைய பாதையில் சூரியகாந்தக் கற்கள் இருபுறமும் விளைந்திருக்கின்றன. சூரிய ஒளி பட்டவுடனேயே அவை கொழுந்துவிட்டு எரிகின்றன. அவற்றின் நடுவே சூரியனின் குதிரைகள் வழி தவறாமல் பாய்கின்றன. இப்படி உதிக்கும்போதே கூசுகின்ற சூரியனுடைய பேரொளி உங்களைக் காக்கட்டும்.

प्लुष्टाः पृष्ठेऽशुपातैरतिनिकटतया दत्तदाहातिरेकै-
रेकाह्नाक्रान्तकृत्स्नत्रिदिवपथपृथुश्वासशोषाः श्रमेण ।
तीव्रोदन्यास्त्वरन्तामहितविहतये सप्तयः सप्तसप्तेः
अभ्याशाकाशगङ्गाजलसरलगलावाङ्नताग्राननना वः ॥ ४५

प्लुष्टा इति ॥ दत्तः दाहातिरेकः तापातिशयः यैः ते तैः दत्त-दाहातिरेकैः । अंशूनां रश्मीनां पातैः । अतिनिकटतया अत्यन्तं समीचीनतया हेतुना पृष्ठे पृष्ठभागे प्लुष्टाः दग्धाः, अत एव अभ्याशे निकटे आकाशे गङ्गा, तस्याः जलेन सरलानि मिलितानि गलानि ग्रीवाः हि तैः अवाङ् नतानि अग्राननानि येषां ते अभ्याशाकाशगङ्गाजलसरलगला-वाङ्नताग्राननाः एकं च तत् अहश्च एकाहः । राजाहः सखिभ्यष्टच् इति टच् प्रत्ययः । एकाह्नेनाक्रान्तः कृत्स्नः सर्वः त्रिदिवः स्वर्गः एकाह्नाक्रान्तश्चासौ कृत्स्नत्रिदिवश्च । तस्य पन्थाः त्रिदिवः "ऋक्पूरब्धूः पथामानक्षे" इति समासान्त अप्रत्ययः । पृथुश्वासस्य । महानिःश्वासस्य । शोषाः एकाह्ना-क्रान्तकृत्स्नत्रिदिवपथपृथुश्वासशोषाः । अत एव श्रमेण तीव्रोदन्याः अत्यन्त-पिपासाः । अशनायोदन्योदनायावभूषायित्वाक्षेञ्चेति निपातः । सप्त सप्तयो यस्य सः सप्तसप्तिः तस्य । सूर्यस्य सप्तयो अश्वाः वः युष्माकं अहितं पापं तस्य विहतिर्नाशः तस्यै अहितविहतयेत्वरन्तां संभ्राम्यन्तु युष्मत्पापविनाशाय भवन्तु इत्यर्थः ॥ ४५

ப்லுஷ்டா; ப்ருஷ்டே (அ)ம்சுபாதை:

அதிநிகடதயா தத்ததாஹாதி ரேகை:

ஏகாஹாக்ராந்த க்ருத்ஸ்ந த்ரிதிவபத-ப்ருது—

ச்வாஸசோஷா: ச்ரமேண ।

தீவ்ரோ தன்யா ஸ்த்வரந்தா மஹித விஹதயே

ஸப்தய: ஸப்தஸப்தே:

அப்யாசாகாசகங்காஜல - ஸரலகலா-

லாங்குதாக்ரா நனா வ: ॥ 45

சூரியனின் தேரை ஏழு குதிரைகள் இழுத்துச் செல்கின்றன. இதனால் இந்தக் குதிரைகளின் பின்புறம் சூரியனின் வெப்பத்தால் தீய்ந்துவிடுகின்றன. இதன் காரணமாகத் தோன்றிய தாகத்தாலும்; ஒரே நாளில் மூவுலகையும் (சுற்றி) வலம் வருவதால் ஏற்படுகின்ற அசதியாலும், பெருமூச்சு விடுகின்றன. தண்ணீர்த் தாகம் அதிகமாகி ஆகாச கங்கைத் தண்ணீரைப் பருக ஆவல்கொண்டு, தனது கழுத்தை நீட்டிக் குனிகின்ற குதிரைகள், உங்கள் தீமைகளை அகற்றி விரைவில் செயல்படட்டும்.

मत्वान्यान्पार्श्वतोऽश्वान् स्फटिकतटदृषद्दृष्टदेहा द्रवन्ती

व्यस्तेऽह्न्यस्तसन्ध्येयमिति मृदुपदा पद्मरागोपलेषु ।

सा दृश्यादृश्यमूर्तिर्मरकतकटके क्लिष्टसूता सुमेरोः-

मूर्धन्यावृत्तिलब्धद्रुतगतिरवतु ब्रध्नवाहावलिर्वः ॥ ४६

मत्वेति ॥ सुमेरोर्मूर्ध्नि शिरसि । स्फटिकं च तत् तटं च, तस्य दृषदः शिलाः तासु दृष्टदेहः प्रतिबिम्बितविग्रहः यस्य सा स्फटिकतटदृषद्दृष्टदेहा सती । अश्वान् स्फटिकतटप्रतिबिम्बिताश्वान् अन्यान्मत्वा पार्श्वतः पार्श्वयोः सार्वविभक्तिकस्तसिः । द्रवन्ती गच्छन्ती । अहनि एव व्यस्ते गच्छन्ती

सतीत्यर्थ । अस्तमियं सन्ध्या इति । पद्मरागोपलेषु पद्मरागशिलासु मृदूनि पदविक्षेपानि यस्यास्सा मृदुपदा । मरकतकटके हरिन्मणिगते । दृश्या सादृश्यात् दृश्या सारूप्यात् अदृश्या द्रष्टुं योग्या मूर्तिराकारो यस्यास्सा दृश्यादृश्यमूर्तिः । क्लिष्टः बाधितः । सूतः सारथिर्यस्यास्सा क्लिष्टसूता । आवृत्या अभ्यासेन लब्धा प्राप्ता, शीघ्रगतिः द्रुतगमनं यया सा आवृत्तिलब्धद्रुतगतिः सा ब्रध्नस्य सूर्यस्य, वाहानां अश्वानां आवलिः पङ्क्तिः वः युष्मान् अवतु रक्षतु ॥ ४६

மத்வான்யான் பார்ச்வதோ(அ)ச்வான்
ஸ்படிகதடத்ருஷத் த்ருஷ்டதேஹா த்ரவந்தீ
வ்யஸ்தே (அ)ஹன்யஸ்த ஸந்த்யேயமிதி
ம்ருதுபதா பத்மராகோபலேஷு ।
ஸா த்ருச்யா த்ருச்யமூர்த்தி: மரகத கடகே
க்லிஷ்டஸூதா ஸுமேரோ:
மூர்தன்யா - வ்ருத்தி - லப்த த்ருதகதிரவ்து
ப்ரத்நஸ்ய ஹாவலிர் வ: ॥ 46

சூரியனுடைய குதிரைகள் எத்தனை நாட்களாக அதே பாதையில் சுற்றிச் சுற்றி வருகின்றன! ஆகவே, அவற்றுக்குப் பாதை தடுமாற்றமே கிடையாது. (आवृत्तिलब्धद्रुतगतिः) ஆனால் மேருவின் சிகரத்தில் குதிரைகளின் பாதையில் முதலில் ஸ்படிகப் பாறைகள் உள்ளன. அவற்றின்மீது குதிரைகளின் பிரதிபிம்பங்கள் தெரிகின்றன. அவற்றோடு போட்டி போட்டுக்கொண்டு சூரியனின் குதிரைகள் விரைகின்றன. அடுத்தாற்போல் பத்மராகம் என்படுகின்ற மாணிக்கப் பாறைகள். அவற்றின் மீது சூரிய ஒளிபட்டு ஆகாயமெல்லாம் சிவந்துவிட்டது. இதனால், குதிரைகள் அந்திமல்லிகை எட்டிவிட்டோம் என்ற நினைப்பில் சற்று மெதுவாக நடக்கின்றன. அதற்குமப்பால் பச்சைப்பசேல் என்ற மரகதப் பாறைகள். அவற்றில் (சூரியனின்) பச்சைக்

குதிரைகள் போகும்போது அவை போவதே தெரிய வில்லை தேரோட்டியும் களைத்துவிட்டான் இத்தகைய சூரியனுடைய குதிரைகள் உங்களைக் காக்கட்டும்.

हेलालोलावहन्ती विषधरदमनस्याग्रजेनावकृष्टा
स्वर्वाहिन्या सुदूरं जनितजवजया स्यन्दनस्यन्दनेन ।
निर्व्याजं तायमाने हरितमणिनिजस्फीतफेनाहितश्री-
रश्रेयांस्यश्वपङ्क्तिः शमयतु यमुनेवापरा तापनी वः ॥ ४७

अत्र सूर्याश्वपङ्क्तेः यमुनासाम्यमुच्यते हेलालोलमिति । हेलया लीलया आलोलं यथा भवति तथा वहन्तीति । उभयत्र समानम् । विषधराः सर्पाः तेषां दमनं भक्षणं यस्य सः गरुडः, तस्य अग्रजेन अनूरुणा (अरुणेन) । अवकृष्टा आकृष्टा । अन्यत्र विषधरमर्दनस्य कालिङ्गमर्दनस्य कृष्णस्य, अग्रजेन बलभद्रेण, अवकृष्टा आहिता । स्वर्वाहिन्याः मन्दाकिन्याः सुदूरं अत्यर्थं स्यन्दनस्य रथस्य स्यन्दनेन वेगेन जनितः जवः जवस्य वेगस्य जयो यया सा जनितजवजया, अन्यत्र स्यन्दनस्य प्रवाहस्य स्यन्दनेन वेगेन स्वर्वाहिन्याः, सुदूरं जनितजवया । आत्मीयप्रवाहवेगेन कृतगङ्गाप्रवाह-जयेत्यर्थः । निर्व्याजं निर्विचारं यथा भवति तथा । तायमाने वर्तमाने हरित-मणिश्यामत्वे, निजेन आत्मीयेन स्फीतेन प्रसिद्धेन फेनेन डिण्डीरेण, आहिता आरोपिता श्रीः शोभा यस्याः सा निजस्फीतफेनाहितश्रीः । अन्यत्र निर्व्याजमपि निर्विवादं तायमाने हरितस्यभावः हरितमाकल्पः हरितमणिश्च-श्यादिभ्य इमनिज्वेति 'इम' निच् प्रत्ययः । कृष्णत्वे निजस्फीतफेनाहितश्रीः । तपनस्यैवं तापनी सूर्यसम्बन्धिनी । अश्वपङ्क्तिः अपरा तपनस्य अस्य स्त्री तापनी सूर्यस्यपुत्री यमुनानदी । वः युष्माकम् । अश्रेयांसि शमयतु नाशयतु ॥

ஹேலா லோலம் வஹந்தீ விஷதர தமநஸ்ய-
அக்ரஜேநா வக்ருஷ்டா
ஸ்வர்வாஹின்யா: ஸூதூரம் ஜநிதஜவஜயா
ஸ்யந்தன ஸ்யந்தநேன ।
நிர்வ்யாஜம் தாயமானே ஹரிதமநிஜே
ஸ்பீத பேநாஹித ஸ்ரீ:
அச்ரேயாம்ஸ்யச்வபங்க்தி:
சமயது யமுனேவாபரா தாபநீ வ: ॥ 47

சூரியனுடைய குதிரைகளுக்கும் யமுனை நதிக்கும் ஒப்புமை கூறுகிறார் கவி.

காளியன் என்ற நாகராஜனின் கொட்டத்தை அடக்கிய கண்ணனின் அண்ணன் பலராமன், தனது கலப்பையால் பூமியைக் கீறி யமுனையை வழிமாற்றிவிட்டான். அதனால் என்ன ? யமுனை கவலைப்படவில்லை. ஒய்யாரமாக (हेलालोलं) மிதப்பாக (स्यन्दनेन) பச்சைப் பசேலென்ற பிரவாகம் ஓடுகிறது அப்பால் இடது புறத்தில் 'கங்கை தன்னை விஞ்சி முன்னேறுகிறதே' ! என்ற கவலையே இல்லை. சிரித்துக்கொண்டே தன்போக்கில் நுரைகளை நிரப்பிக் கொண்டே போகிறது.

இது போல, சூரியனுடைய குதிரைகளும் அன்றாடம் ஓடிப்பழகிய நம்பிக்கையில் — பாம்புகளை அடக்குகின்ற கருடனின் சகோதரனான அருணனின் 'லகான்'— கடிவாளம், இழுப்புக்கு இடம் கொடாமல் — ஆகாச கங்கையின் வேகத்தை வெற்றிகொண்டு தமது பச்சை நிற நிழல் நீண்டுகொண்டேபோக வாய்களில் நுரைகளைப் பெருக்கிக் கொண்டு, நிதானமாக ஓடுகின்ற சூரியனுடைய குதிரைகள் உங்களது தீமைகளை ஒழிக்கட்டும்.

இங்கு ஒரு ஸ்வாரஸ்யம் யமுனை — தாபநீ, ஸூர்யனுடைய பெண். ஸூர்யனின் குதிரை வரிசையும் தாபநீ. இப்படி இந்தச் சொல்லின் சிலேடையும் சுலோகத்திற்கு மெருகூட்டுகிறது.

मार्गोपान्ते सुमेरोर्नुवति कृतनतौ नाकधाम्नां निकाये
वीक्ष्य व्रीडानतानां प्रतिकुहरमुख किन्नरीणां मुखानि ।
सूतेऽसूयत्यपीषज्जडगति वहतां कन्धराग्रैर्वलद्भि-
र्वाहानां व्यस्यताद्वः सममसमहरेर्ह्रेषितं कल्मषाणि ॥ ४८

मार्गोपान्त इति । सुमेरोः मार्गोपान्ते मार्गपार्श्वे । नाकः स्वर्गः । धाम स्थानं येषां ते नाकधामानः तेषां नाकधाम्नां देवानाम् । निकाये समूहे । कृतनति, कृतः नमस्कारः यस्य सः तस्मिन् कृतनतौ । नुवति स्तुवति । कुहरमुखेषु प्रतिकुहरमुखं, गुहामुखेष्वित्यर्थः । व्रीडावतीनां लज्जावतीनां किन्नरीणां मुखानि वीक्ष्य, सूते सारथौ । असूयति असूयां कुर्वति । ईषज्जडा गतिर्यस्मिन् कर्मणि तत् ईषज्जडगतीव लब्धैः कन्धराग्रैः । वहतां असमाः विषमाः । हरयः यस्य सः तेन असमहरेः सूर्यस्य "यमानिलेन्द्रचन्द्रार्कविष्णुसिंहांशुवाजिषु । शुकाहिकापिभेकेषु" हरिरित्यमरः । वाहानां अश्वानां ह्रेषितं समं एककालीनाम् । कल्मषाणि पापानि । वः व्यस्यतात् अपनुदतु ॥ ४८

மார்கோபாந்தே ஸுமேரோர் நுவதி
க்ருதநதௌ நாகதாம்னாம் நிகாயே
வீக்ஷ்ய வ்ரீடாநதாநாம் ப்ரதிகுஹரமுகம்
கின்னரீணாம் முகாநி ।
ஸூதே (அ)ஸூயத்யபீஷஜ்ஜடகதி
வஹதாம் கந்தராக்ரைர் வலத்பி:
வாஹாநாம் வ்யஸ்யதாத்வ:
ஸமமஸமஹரே: ஹ்ரேஷிதம் கல்மஷாணி ॥ 48

மேரு பர்வதத்தின் வழியாக சூரியனின் ரதம் செல்லும் போது, வழியில் தேவர்களின் குழாம் சூரியனை வழிபட்டு, துதிசெய்து தலை வணங்குகின்றனர். அப்போது மேரு மலைகளிலுள்ள குகைகளிலிருந்து வெளிவந்த குதிரைமுக முடைய கின்னரப் பெண்கள், சூரியனின் குதிரைகளைக் கண்டு நாணித் தலைகுனிகின்றனர், இச் செயலைக் கண்டு ரதக் குதிரைகள் மெல்ல நடை போட்டுத் திரும்பிப் பார்க்கின்றன. இதனால் கோபங்கொண்ட சூரியசாரதி அருணன் குதிரைகளின் கடிவாளத்தைப் பிடித்து இழுக்கிறான். இதன் காரணமாக அந்தத் தேர்க்குதிரைகள் ஏக காலத்தில் கனைக்கின்றன. இத்தகைய கனைப்பொலி உங்களுடைய பாபங்களை அழிக்கட்டும்.

धुन्वन्तो नीरदालीर्निजरुचिहरिताः पार्श्वयोः पक्षतुल्या-
स्तालूत्तानैः खलीनैः खचितमुखरुचश्च्योतता [1]लोहितेन ।
उड्डीयेव व्रजन्तो वियति गतिवशादर्कवाहाः क्रियासुः
क्षेमं हेमाद्रिहृद्यद्रुमशिखरशिरःश्रेणिशाखाशुका वः ॥ ४९

धुन्वन्त इति ॥ निजा स्वकीया । रुचिः कान्तिः तया हरिताः । शुकपक्षकान्तिरित्यर्थः । पार्श्वयोः, पक्षतुल्याः नीरदानां मेघानां, आवलिः पङ्क्तिः, ताः धुन्वन्तः कम्पयन्तः, तालुषु उत्तानैः । खलिनं नाम अश्ववक्त्रक्षिप्तायोमययन्त्रविशेषः । श्च्योतता स्रवता शोणितेन रुधिरेण, खचिताः व्याप्ताः, मुखेषु, रुचः कान्तयो, येषां ते खचितमुखरुचः । वियति आकाशे गतिवशात् गमनवशात्, उड्डीयेव व्रजन्त इव गच्छन्त इव, पक्षिवद्व्रजन्तीवेत्यर्थः । हृद्या मनोज्ञाः हृद्यद्रुमाः येषां तानि, तानि च

1. शोणितेन इति पाठः ॥

तानि शिखराणि च हेमाद्रेः हृद्यद्रुमशिखराणि तान्येव शिरांसि । तेषां श्रेणयः तासां शाखाः परंपराः तासु शुकाः हेमाद्रिहृद्यद्रुमशिखरशिरःश्रेणिशाखाशुकाः । अर्कवाहाः सूर्याश्वाः । वः युष्माकं क्षेमं क्रियासुः ॥

॥ अश्ववर्णनं सम्पूर्णम् ॥

துந்வந்தோ நீரதாலீர்நிஜருசி ஹரிதா:
பார்ச்வயோ: பக்ஷதுல்யா:
தாலூர்த்தானை: கலீனை: கபிதமுகருசச்-
ச்யோததா லோஹிதேந |
உட்டீயேவ வ்ரஜந்தோ வியதி
கதிவசாதர்கவாஹா: க்ரியாஸு:
க்ஷேமம் ஹேமாத்ரி-ஹ்ருத்ய-
த்ரும-சிகர-சிர: ச்ரேணி-சாகா-சுகா-வ: ॥ 49

சூரியனின் குதிரைகளுக்கும் - பச்சைக்கிளிகளுக்கும் ஒப்புமைப்படுத்திப் பாடுகிறார் கவி.

ஆகாயத்தில் சூரியனுடைய குதிரைகள் கால் பதிந்து ஓடுகின்றனவா? பறக்கின்றனவா? அவை குதிரைகள் தாமா? அல்லது தங்கமலையான மேருவில், வானளாவி வளர்ந்திருக்கும் மரவரிசைக் கிளைகளில் அமர்ந்திருந்த கிளிகள் தாம் பறக்கின்றனவா ? அவை பறக்கும் வேகத்தில் மேகங்களெல்லாம் பச்சை நிறம் கொண்ட இறக்கைகளைப் போல பக்கத்தில் வருகின்றன. கிளியின் அலகு செந்நிறமாக இருப்பது போல குதிரை முகங்கள் கடிவாள இறுக்கத்தினால் ரத்தம் கக்கிச் சிவந்துள்ளன. அத்தகைய கிளிகள் போன்ற சூரியனின் குதிரைகள் உங்களுக்கு க்ஷேமத்தை அருளட்டும்.

## ॥ अथ सूर्यसारथिवर्णनम् ॥

प्रातः शैलाग्ररङ्गे रजनिजवनिकापायसंलक्ष्यलक्ष्मी-
 र्विक्षिप्यापूर्वपुष्पाञ्जलिमुडुनिकरं सूत्रधारायमाणः ।
यामेष्वङ्केष्विवाह्नः कृतरुचिषु चतुर्ष्वेव लब्धप्रतिष्ठा-
 मव्यात्प्रस्तावयन्वो जगदटनमहानाटिकां सूर्यसूतः ॥ ५०

प्रातरिति ॥ प्रातः प्रभाते । शैलः उदयपर्वतः । तस्य अग्रं तदेव रङ्गः सभा तस्मिन् शैलाग्ररङ्गे रजनी रात्रिः रजन्येव, जवनिका तिरस्करणी तस्याः अपायः तेन संलक्ष्यालक्ष्मीः यस्य सः तथोक्तः । अपूर्वपुष्पाञ्जलिं, उडूनां नक्षत्राणां, निकरः समूहः तं उडुनिकरं तु निक्षिप्य विकीर्य अह्नः दिवसस्य । कृता रुचिः येषां ते तेषु कृतरुचिषु चतुर्षु यामेषु प्रहरेष्विव चतुर्षु अङ्केष्विव "चतुरङ्का तु नाटिके"ति प्रसिद्धम् । लब्धा प्रतिष्ठा यया सा तां लब्धप्रतिष्ठां जगतां अटनं सञ्चमनमेव महानाटिका तां जगदटन-महानाटिकाम् । प्रस्तावयन् प्रस्तावं कुर्वन् । सूत्रधार इव आचरति सूत्रधारायमाण । यथा सूत्रधारः सभायां यवनिकापायसंलक्ष्यलक्ष्मीस्मन् पुष्पाञ्जलिं विकीर्य नाटिकां प्रस्तापयति तद्वदित्यर्थः । सूर्यसूनः सारथिः वः युष्मान् । अव्यात् पायात् ॥ ५०

*ப்ராதः ஶைலாக்ர-ரங்கே*
 *ரஜநிஜவநிகாபாய-ஸம்லக்ஷ்ய லக்ஷ்மீः*
*விக்ஷிப்யா-பூர்வ-புஷ்பாஞ்ஜலிமுடுநிகரம்*
 *ஸூத்ரதாராயமாணः ।*
*யாமேஷ்வங்கேஷ்விவாஹ்நः க்ருதருசிஷு-*
 *சதுர்ஷ்வேவ லப்தப்ரதிஷ்டாம்*
*அவ்யாத் ப்ரஸ்தாவயன் வோ*
 *ஜகதடநமஹா-நாடிகாம் ஸூர்ய ஸூதः ॥ 50*

## சூரிய சாரதி அருணன் வர்ணனை

இக் கவிதையில் சூரியனின் செயலை நாடகமேடையில் நடைபெறும் நாடிகை (நாடக வகைகளிலொன்று) யாக வர்ணிக்கிறார் மயூரகவி.

உதயகிரியின் உச்சியிலுள்ள நாடகமேடையாகிய வானில், இரவாகிய மேடைத்திரை விலகியதும் ஒளிமயமாகத் தோன்றக் கூடியவனும், நாடக மேடையில் தோன்றி நக்ஷத்திரங்களை மலர்களாகக் கையிலேந்தி அஞ்சலி செய்யும் சூத்திரதாரனாக இருப்பவனும், அண்டகோளமான, இச்சம்சாரத்தையே சுற்றிவருவதாகிய கதையை மையமாகக் கொண்ட மஹாநாடிகையைத் தொடங்குகின்றவனுமான சூரியனின் சாரதி அருணன் உங்களைக் காக்கட்டும்.

நாடக மேடையில் திரைச் சீலை விலகியதும் பேரொளி எழும்பும். நாடகத்தின் முதலில் தோன்றுகின்றவன், நாடகத்தின் சூத்திரதாரன் (இயக்குநர்). தோன்றிய சூத்திரதாரன் முதலில் மலரஞ்சலி செய்வான், அதன் பின்னரே நாடகம் தொடங்கும். இதனை வரிசைப்படுத்தி உவமை கூறுகிறார் கவி. இங்கு வானம் என்பதே நாடக மேடை. இரவு — திரை; அருணன் — சூத்திரதாரன்; மின்னுகின்ற நக்ஷத்திரங்களே சிதறியுள்ள அஞ்சலி மலர்கள். சூரியன் அண்டகோளங்களைச் சுற்றுதலாகிய பணியே இந்த நாடகத்தின் கதை என்பதை உவமை அணியின் வாயிலாக (உபமாலங்காரம்) இக் கவிதையில் விளக்கியுள்ளார் கவி.

இதில் 'நாடிகை' என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது சம்ஸ்கிருத மொழியில் பத்துவிதமான நாடகங்கள் — தசரூபகானி — உண்டு. அவையாவன : "1. நாடகம், 2. பிரகரணம், 3. பாணம், 4. பிரஹஸனம், 5. டிமம், 6. வ்யாயோகம், 7. சமவாகாரம், 8. வீதி, 9. அங்கம், 10. ஈஹாம்ருகம்" ஆகியன. இவற்றைத் தவிர மூன்று

முக்கியமான உபரூபகங்களுண்டு. அவை: 1. நாடிகா, 2. ப்ரேக்ஷணகம். 3. சட்டகம் என்பனவாகும். இவற்றில் "நாடிகா" என்பதை உதாரணமாகக் குறிப்பிட்டுள்ளார். ஏனெனில் ஒரு பகலுக்கு நான்கு யாமங்கள். 'நாடிகை' என்ற உபரூபகத்திற்கும் நான்கு அங்கங்கள் என்ற காரணத்தால் 'நாடிகை' என்ற நாடக வகையை உதாகரணமாகக் குறித்துள்ளார் கவி.

आक्रान्त्या वाह्यमानं पशुमिव हरिणा वाहकोऽग्रथो हरीणां
भ्राम्यन्तं पक्षपाताज्जगति समरुचिः सर्वकर्मैकसाक्षी ।
शत्रुं नेत्रश्रुतीनामपजयति वयोज्येष्टभावे समेऽपि
स्थेम्नां धाम्नां निधिर्यः स भवदघनुदे नूतनः स्तादनूरुः ॥ ५१

आक्रान्त्येति ॥ हरीणामश्वानाम् । अग्रयः प्रधानः । वाहकः प्रेरकः । समा रुचिर्यस्य सः समरुचिः । सूर्येणेति भावः । सर्वाणि च तानि कर्माणि च तेषां एकसाक्षी । स्थेम्ना स्थैर्याणां पृथ्वादिभ्यां इम निज्वेति इमनिच् प्रत्ययः । प्रियस्थिरेत्यादिना स्थिरशब्दस्य स्थाऽऽदेशः । धाम्नां तेजसाम् । निधीयन्ते तेजांसि अस्मिन्निति निधिः । यः अनूरुः अरुणः "सूरसूतोऽरुणोनूरुरि"त्यमरः । हरिणा विष्णुना । पशुमिव आक्रान्त्या अवष्टंभेन वाह्यमानं जगति । पक्षपातात् पक्षविक्षेपात् । भ्राम्यन्तं धावन्तम् । वयसां पक्षिणां । ज्येष्टभावः स्वामित्वम् । अन्यत्र, वयसां ज्येष्टभावः अग्रजत्वं एवमनूरुगरुडयोः ज्येष्ठभावेन समत्वेऽपि नेत्राण्येव श्रुतयः तेषां नेत्रश्रुतीनां सर्वेषां सर्पाणां शत्रुं गरुडम् । अपजयति अतिशयेन । नूतनः । माता असमये अण्डं अनभित्वा अनूरुं निष्पादं कृतवतीति पुराणात् । भवदघनुदे पापनाशाय । स्तात् भवतु ॥ ५१

ஆக்ராந்த்யா பாஹ்யமாநம் பசுமிவ
ஹரிணா வாஹகோ (அ)க்ரியோ ஹரீணாம்
ப்ராம்யந்தம் பக்ஷபாதாஜ்ஜகதி
ஸமருசி: ஸர்வகர்மைக ஸாக்ஷீ ।
சத்ரும் நேத்ரச்ருதீணாம் அபஜயதி
வயோஜ்யேஷ்ட பாவே ஸமே(அ)பி
ஸ்தேம்னா தாம்னாம் நிதிர்ய:
ஸ பவதநுதே நூதந: ஸ்தாதநூரு: ॥ 51

மயூரகவி இந்த சுலோகத்தில் அருணனையும் - கருடனையும் ஒப்புமைப் படுத்திப் பேசுகிறார்.

அருணனும் கருடனும் சகோதரர்கள். விநதையின் குமாரர்கள். அருணன் வயதில் பெரியவன் — **वयसा ज्येष्ठ:** கருடனும் ஒரு விதத்தில் **वयो ज्येष्ठ:** அதாவது **वयसां ज्येष्ठ:** பக்ஷிகளுக்கு மூத்தவன். இவ்வளவு தான் இருவருக்கும் ஒற்றுமை. அருணன் நிலையான செல்வங்களுக்கெல்லாம் கருவூலம், மக்களின் புண்ணிய, பாபச் செயல்களையெல்லாம் கண்காணிக்கின்றவன். மேலும், இவன் உலக உயிர்களிடமுள்ள பரிவினால் உலகைச் சுழற்றி வருகிறான். இவன் சூரியனின் குதிரைகளை விரட்டிச் செல்லும் சாரதி முதல்வன். ஆனால் கருடன், ஹரியான திருமாலைத் தனது தோளில் ஏற்றிச் செல்கிறான். **हरिणा आक्रान्त्या वाह्यमानं** இவன் வேகமாகப் பறப்பதற்குக் காரணம் திருமால் தமது துடைகளினால் உசுப்பி விடுவதுதான். **पक्षपातात्** பாவம், பாம்புகள் கண்களால் கேட்டும் திறன் பெற்றவை. அவற்றுக்குச் சத்ருவாக விளங்குகிறான் கருடன். (இந்த) கருடனையும் தோற்கடிக்கிறான் இடுப்புக்குக் கீழ் உடல் விளங்காத அருணன் என்று அருணனின் பெருமையைப் பேசுகிறார் கவி.

**दत्तार्घैर्दूरनम्रैर्वियति विनयतो वीक्षितः [1]सिद्धसार्थैः**
**सानाथ्यं सारथिर्वः स [2]दशशतरुचेः सातिरेकं करोतु ।**

---

1. सिद्धसार्थैः (A) 2. सहस्रशतरुचे (D)

आपीय प्रातरेव प्रततहिमपयस्स्यन्दिनीरिन्दुभासो
य: काष्ठादीपनोऽग्रे जडित इव भृशं सेवते पृष्ठतोऽर्कम् ॥ ५२

दत्तार्घैरिति ॥ वियति आकाशे दत्त: अर्घो यैस्ते दत्तार्घा: तै: । दूरनम्रै: दूरादवनतै: । सिद्धसार्थै: सिद्धसमूहै: । विनयत: विनयात् । पचम्यास्तसिलिति तसिल्प्रत्यय: । वीक्षित: दृष्ट: । दशशतं सहस्रं रुचयो यस्य स: तस्य दशशतरुचे: सूर्यस्य । सारथि: रथचोदक: । अनूरु: । व: युष्माकम् । सातिरेकं सातिशयम् । सानाथ्यं साहाय्यम् । करोतु । य: अनूरु: । प्रातरेव । प्रततं विस्तृतं, प्रततं च तत् हिमपयश्च प्रततहिमपय: । स्यन्दितुं शीलमासामस्तीति प्रततहिमपयस्यन्दिनी: । इन्दुभास: चन्द्ररश्मीन् । आपीय सम्यक् पीत्वा । जडित इव शीत: इव । अग्रे पुरत: । काष्ठा: दिश: । दीपयति प्रकाशयतीति काष्ठादीपन: । अन्यत्र --

काष्ठानि इन्धनानि । आदीपयति भृशं ज्वालयतीति काष्ठादीपन: स: पृष्ठत: पश्चाद्भागे, अर्कं भृशमत्यर्थं सेवते यथा । य: कश्चिज्जडित: अग्रे काष्ठे प्रचलितमग्निम् । पृष्ठतोर्कं च । सेवते तद्वदित्यर्थ: ॥ ५२

*தத்தார்கை: தூரநம்ரை: வியதி விநயதோ*
*வீக்ஷித: ஸித்த ஸார்தை:*
*ஸாநாத்யம் ஸாரதிர்வ: ஸ*
*தசசதருசே: ஸாதிரேகம் கரோது ।*
*ஆபீய ப்ராதரேவ ப்ரததஹிமபய:*
*ஸ்யந்திநீரிந்து-பாஸ:*
*ய: காஷ்டா தீபனோக்ரே ஜடித இவ ப்ருசம்*
*ஸேவதே ப்ருஷ்டதோ (அ)ர்க்கம் ॥* **52**

"ஓஹோ ! அருணன் குளிர்காய்கிறானோ !" என்று உலகியலுடன் ஒப்பிடுகிறார் கவி இந்த சுலோகத்தால் .-

சித்த புருஷர்களின் கூட்டம் தலைவணங்கி அளிக்கும் அர்க்யத்தால் மகிழ்ந்து, அவர்களை கருணையுடன் கடாக்ஷிப்பவனும், அதிகாலையில் பனிநீரைப் பொழியும் சந்திரனின் கிரணங்களையுண்டு. குளிரால் பீடிக்கப்பட்டவனாக, பின்புறத்தில் (ப்ருஷ்ட பாகத்தால்) சூரியனை ஏற்றுக் குளிர்காய்ந்துகொண்டும் **काष्ठादीपन:** தனக்கு முன்னால் திசைகளை ஒளிமயமாக்கிக் கொண்டு விளங்குகின்ற அருணன் அதிசயிக்குமளவில் உங்களுக்கு உதவி புரியட்டும்.

குளிர்காயும் மனிதன் (**काष्ठादीपन:**) விறகுகளை எரியவிட்டு அதன் முன்னால் உட்கார்ந்தும், சூரியனுக்கு முதுகைக் காட்டியும், அமர்ந்து குளிர்காய்வான். இதனால் குளிரின் தாக்கத்தைச் சமாளித்து சுகத்தை அடைவான். அருணன் பனிஜலத்தை அதிகமாக உண்டு, அதன் காரணமாக ஜில்லிட்டுப் போய்விட்டான். இந்நிலையில் "கணப்பாக" இருக்கும் பொருட்டு "சூரியனுக்கு முதுகை காட்டிக்கொண்டு இருப்பது அருணன் குளிர்காய்வதைப் போல் உள்ளது" என்று உலகியலில் காணப்படும் செய்திகளை இச்சுலோகத்தால் வெளிப்படுத்துகிறார் கவி. மேலும். இந்த சுலோகத்தில் **काष्ठादीपन:** என்ற சொல்லின் ச்லேஷை ரஸிக்கத் தக்கது.

**मुञ्चन् रश्मीन्दिनादौ दिनगमसमये संहरंश्च स्वतन्त्र**

**स्तोत्रप्रख्यातवीर्यो वियतिहरिपदाक्रान्तिबद्धाभियोगः ।**

**कालोत्कर्षाल्लघुत्वं प्रसभमधिपतौ योजयन्यो द्विजानां**

**सेवाप्रीतेन पूष्णात्मसम इव कृतस्त्रायतां सोऽरुणो वः ॥ ५३**

**आराधनेनानुरोः सूर्येण साम्यमुच्यते मुञ्चन्निति ॥ दिनादौ प्रातःकाले । रश्मीन् प्रग्रहान् । अन्यत्र रश्मीन् किरणान् । 'किरणप्रग्रहौ**

रश्मि' इत्यमरः । मुञ्चन् त्यजन् । दिनगमसमये अस्तमसये । संहरन् सङ्कोचयन् । अभयत्र समानम् । स्वतन्त्रः प्रधानः । तोत्रेण तोदनेन । प्रख्यातं प्रसिद्धं वीर्यं बलं यस्य सः, तोत्रं नाम अश्वप्रेरणे साधनयष्टि-विशेषः । 'प्राजनं तोदनं तोत्रं' इत्यमरः । सारथ्ये प्रख्यातवीर्यः इत्यर्थः । अन्यत्र स्तोत्रैः स्तुतिभिः प्रख्यातवीर्यः । वियति आकाशे । हरीणां अश्वानाम् । पादक्रान्तौ पादविक्षेपे । बद्धः अभियोगः आस्था येन सः । अन्यत्र हरिपदं स्थिर सङ्क्रान्तिः तस्याः आक्रान्त्या लङ्घनेन बद्धाभियोगः । उक्तं च ज्योतिषरत्नमालायां "हरिपदं स्थिरभे रविसङ्क्रमः स्थिरभे स्थिर-राशौ रविसङ्क्रमः हरिपदमि"ति नाम भवति । यद्वा हरिपदमाकाश तल्लङ्घने बद्धाभियोगः । यः अरुणः । द्विजानां पक्षिणां, अधिपतौ गरुडे । कालोत्कर्षात् पूर्वकाले जातत्वात्, लघुत्वं अनुजत्वं योजयन् । अन्यत्र द्विजानां पक्षिणां अधिपतौ चन्द्रे कालमुहूर्तादिभिः । तस्य उत्कर्षात् । वृद्धेर्हेतोः प्रसभं शीघ्रं लघुत्वं क्षयोपरि योजयन् योजयतीत्यर्थः । सः अरुणः । सवयवः सावयवः आराधनेन प्रीतेन तुष्टेन । पूष्णा सूर्येण । स्वेन आत्मना । समः सदृश इव । वः युष्मान् । त्रायताम् ॥ ५३

முஞ்சன் ரச்மீந்தினாதௌ தினகமஸமயே
ஸம்ஹரம்ச்ச ஸ்வதந்த்ர:
ஸ்தோத்ர ப்ரக்யாத வீர்யோ-
வியதி ஹரிபதாக்ராந்தி பத்தாபியோக: ।
காலோத்கர்ஷால்லகுத்வம் ப்ரஸபமதிபதௌ
யோஜயந்யோ த்விஜாநாம்
ஸேவா ப்ரீதேந பூஷ்ணாத்ம
ஸம இவ க்ருத்த்ராயதாம் ஸோ (அ)ருணோ வ: ॥ 53

இந்த சுலோகத்தில் சிலேடையணியாகச் சொற்களை அமைத்துள்ளார் மயூர கவி,

சூரியன் தன் தேரோட்டியான அருணனைத் தனக்கு நிகரான தகுதியுள்ளவனாகக் கண்டு அவனைத் தனக்கு சமானனாக மதிக்கிறான். இத்தகைய அருணன் உங்களைக் காக்கட்டும்.

சூரியன் காலையில் தன் கிரணங்களை வெளியேவிட்டு மாலையில் சுருக்கிக் கொள்கிறான். அருணன், குதிரைகளின் மூக்குக் கயறுகளை (கடிவாளக் கயற்றை) காலையில் தளர்த்தி, மாலையில் இழுத்துப் பிடிக்கிறான் இங்கு ரச்மி (रश्मि) என்ற சொல் சிலேடையாக, கிரணங்களையும், மூக்குக் கயறுகளையும் குறிக்கிறது. சூரியன் ஸ்தோத்திரத்தினால் (स्तोत्र) தன் மகிமை விளங்கப் பெற்றவன். அருணன் தோத்திரத்தினால் (तोत्र) சாட்டை வீசுவதில் சமர்த்தன் என்று புகழப்பட்டவன். இங்கு, ஸ்தோத்ர - தோத்ர (स्तोत्र-तोत्र) என்னும் சொற்கள் வெவ்வேறாயினும் அமைப்பினால் ஒன்று போலக் காணப்படுகின்றன. சூரியன் 'ஹரிபதம்' என்ற சொல்லுக்குரிய ஆகாயத்தை அளாவுவதில் கவனம் செலுத்துகிறான். ஹரி - குதிரை, பதம் - கால்கள். அவற்றின் நடையில் கவனம் செலுத்துகிறான் அருணன். த்விஜாதாம் அதிபதி என்றால் द्विजराजः शशधरः नक्षत्रेशः क्षपाकरः என்றபடி சந்திரன் என்றும் பொருள், शकुन्त शकुनद्विजाः என்றபடி பக்ஷிகளுக்குப் பெயர். இதை சிலேடையாக உபயோகப்படுத்தி, அருணன் பக்ஷிராஜனான கருடனுக்கு முன்னவனாகப் பிறந்ததால் பக்ஷிராஜனை லேசாகிவிட்டான், சூரியனோ, காலையில் சந்திரனைப் பின்தள்ளி லேசாக்குகின்றான். இவ்வித ஒத்த செயல்களால், சூரியன், அருணனைத் தனக்கு ஈடானவனாக மதித்தான்.

शातः श्यामालतायाः पशुरिव तमोऽरण्यवह्नेरिवार्चिः
प्राच्येवाग्रे गृहीतुं ग्रहकुमुदवनं प्रागुदस्ताऽग्रहस्तः ।

ऐक्यं भिन्दन्द्युभूम्योरवधिरिव विधातेव विश्वप्रबोधं
वाहानां वो विनेता व्यपनयतु विपन्नाम धामाधिपस्य ॥ ५४

शात इति ॥ श्यामा रात्रिः । श्यामैव लता तस्य श्यामलतायाः । शातः नीतः । पशुरिव अङ्कुर इव । तम एवारण्यम् । विपिनं "अटव्यरण्यं विपिन"मित्यमरः । तस्य वह्नेः । अर्चिरिव ज्वालेव । अग्रं पुरतः । ग्रहा एव कुमुदानि तेषां वनम् । गृहीतुं आदातुम् । प्राच्या प्राग्दिगङ्गनया प्राक् पुरस्तात् । अग्रश्चासौ हस्तश्च अग्रहस्तः । उदस्तः प्रेरितः । उदस्तश्चासावग्रहस्तश्च उदस्ताग्रहस्त इव । द्युभूम्योराकाशभूम्यो रैक्यं एकीभावं भिन्दन् अवधिरिव मर्यादेव । विश्वस्य प्रबोधं ज्ञानम् । कुर्वन्निव स्थितः । धामाधिपस्य सूर्यस्य । वाहानां अश्वानाम् । विनेता सारथिः अरुणः विपन्नाम । व्यपनयतु ॥ ५४

*சாத: ச்யாமாலதாயா:*
*பசுரிவ தமோ அரண்யவஹ்நேரிவார்சி:*
*ப்ராச்யேவ-அக்ரே க்ருஹீதும்*
*க்ரஹகுமுதவநம் ப்ராகுதஸ்தாக்ரஹஸ்த: ।*
*ஐக்யம் பிந்தந்த்யு-பூம்யோ:*
*அவதிரிவ விதாதேவ விச்வப்ரபோதம்*
*வாஹாநாம் வோ விநேதா வ்யபநயது*
*விபந்நாம தாமாதிபஸ்ய ॥* **54**

*கீழ்வானில் அருணன் உதயமாகிவிட்டான். எங்கும் செம்மையான காட்சி. இரவின் கருமை இன்னும் முழுமையாக (பூர்ணமாக) மறையவில்லை. இந்த நிலையில் 'சிவந்திருக்கும் இவ்வொளி யாதாக இருக்கும்?' என்று கவி சிந்திக்கின்றார்.*

இரவாகிய சாமைப் பயிரின் கொடியை வெட்டி வீழ்த்தும் கோடரியின் ஒளியோ? அல்லது இருளாகிய காட்டில் பேரொளி உமிழும் அக்னியின் ஜ்வாலையோ? அல்லது திங்கள், செவ்வாய் முதலிய க்ரஹங்களாகிய (கோள்கள்) குமுத வனத்தை ஆள்வதற்காக வானில் எழும் கைகளோ? இரவில் இருள் சூழ்ந்த போது பூமியும், ஆகாயமும் ஒன்றாகவே தோன்றும். அவற்றைப் பிரித்து எல்லை கட்டுகிறானோ? அல்லது உலகை அறியாமைத் துயிலிலிருந்து எழுப்பும் பிர்ஹ்ம்ம தேவனோ? என்று பிரமிக்கச்செய்யும் ஒளியுடைய சூரிய சாரதியான அருணன் உங்களுடைய அனைத்துத் துன்பங்களையும் அழிக்கட்டும்.

**पौरस्त्यस्तोयदर्तोः पवन इव पतन्पावकस्येव धूमो**
**विश्वस्येवादिसर्गः प्रणव इव परं पावनो वेदराशेः ।**
**सन्ध्यानृत्योत्सवेच्छोरिव मदनरिपोर्नन्दिनान्दीनिनादः**
**सौरस्याग्रे सुखं वो वितरतु विनतानन्दनः [1]स्यन्दनस्य ॥ ५५**

पौरस्त्य इति ॥ तोयदर्तोः वर्षर्तोः । अग्रे पतन् गच्छन् । पुरस्ताद्भवः पौरस्त्यः । पवनो वायुरिव, पावकस्याग्नेः धूमः इव, विश्वस्य अग्रे पतन् आदिसर्गः प्रथम सृष्टिरिव । वेदराशेः वेदसमूहस्य (अग्नेः) । पतन् (परं) पावनः प्रणव इव । सन्ध्यायां नृत्यं तदेवोत्सवः तमिच्छति सन्ध्यानृत्योत्सवेच्छुः तस्य सन्ध्यानृत्योत्सवेच्छोः । मदनरिपोः शिवस्य । नन्दिनो नन्दिकेश्वरस्य । नान्दीनिनादः मङ्गलध्वनिरिव, सौरस्य सूर्यसम्बन्धिनः । स्यन्दनस्य रथस्य । अग्रे पतन् । विनतायाः नन्दनः अनूरुः । वः युष्माकम् । सुखम् । वितरतु विदधातु ॥ ५५

---

1. नन्दनः स्यन्दनो वः (E)

பௌரஸ்த்யஸ்தோயந்ர்தோ: பவந இவ
பதந் பாவகஸ்யேவ தூமோ
விஸ்வஸ்யேவாதிசர்க: ப்ரணவ இவ பரம்
பாவநோ வேதராசே: ।
சந்த்யா-ந்ருத்யோத்ஸவேச்சோரிவ
மதநரிபோ: நந்திநாந்தீநி நாத:
ஸௌரஸ்யாக்ரே ஸூகம் வோ
விதரது விநதாநந்தந: ஸ்யந்தநஸ்ய ॥ 55

பருவ மழை பொழிவதற்கு முன் முதலில் காற்று விசும். அதன் பின்னரே மழை பொழியும். இதைப் போலவே சூரியன் உதயமாவதற்கு முன் அருணன் தோன்று கின்றான். மேலும், நெருப்பை (அக்னியை)ப் பெற அரணிக் கட்டையைக் கடைவார்கள். அப்போது அந்த அரணிக்கட்டையிலிருந்து அக்னி தோன்றுவதற்கு முன், முதலில் தோன்றுவது புகை. அதன் பின்னரே அக்னி வெளிப்படும், அதைப் போல சூரிய உதயத்திற்கு முன் அருணன் தோன்றுகின்றான். அடுத்து, உலகம் தோன்று வதற்கு முன் 'ஓம்' என்ற ப்ரணவ ஒலி தோன்றும். அதன் பின்னரே உலகம் தோன்றும். இங்கு அருணன் ப்ரணவம் போலவும், அதன் பின் வேதம் போல சூரியனும் தோன்று கின்றனர். ப்ரணவம் தோன்றினால் வேதமும், வேத விஹித கர்மாக்களும் தோன்றுமல்லவா? அதையும் இங்கு சுட்டிக் காட்டுகின்றார் கவி. வேதத்தை அத்யயனம் செய்வதற்கு முன்னரும், முடிக்கும் போதும் ப்ரணவத்தைக் கூறி அதற்குப் பின்னரே வேதாத்யயனமும், வேத விஹித கர்மாக்களையும் இயற்றுவது மரபு. இவ்விரண்டு செயல் களையும் புனிதப்படுத்தும் ப்ரணவம்போல அருணன் உதய மாகிறார். மேலும், சூரியனுடைய தேர் ஓடி வருகிறது. அதிலிருந்து எழும் ஓசை சந்தியா காலத்தில் சிவபெருமானின் தாண்டவத்திற்கு முன் நந்தியெம் பெருமான் எழுப்பும் மிருதங்கத்தின் ஓசைபோல, அருணன் குதிரையோட்டும் அமைதியான் ஒலி ஒலிக்கின்றதாம்.

இத்தகைய சிறப்பு மிகுந்த சூரியசாரதியான அருணன் உங்களுக்கு அனைத்துச் சுகங்களையும் அளிக்கட்டும்.

**पर्याप्तं तप्तचामीकरकटकतटे श्लिष्टशीतेतरांशा-**
**वासीदत्स्यन्दनाश्वानुकृतिमरकते पद्मरागायमाणः ।**
**यः सोत्कर्षां विभूषां कुरुत इव कुलक्ष्माभृदीशस्य मेरो-**
**रेनांस्याह्नाय दूरं गमयतु गुरुः काद्रवेयद्विषो वः ॥** ५६

पर्याप्तमिति ॥ पर्याप्तं अत्यर्थम् । चामीकरं सुवर्णम् । चामीकरमयानि च तानि कटकानि, तप्तानि च तेषां तटं चामीकरतटं च तस्मिन् तप्तचामीकरकटकतटे । पद्मरागायमाणः पद्मराग इव आचरन्, यः अरुणः । आसीदतः आसन्नीभवन्तः, आसीदन्तश्च ते, स्यन्दनाश्वाश्च तान् । अनुकरोतीत्यासीदत्स्यन्दनाश्वानुकृति तच्च तत् मरकतं च तस्मिन् । आसीदत्स्यन्दनाश्वानुकृतिमरकते । शीतादितरे शीतेतरे च ते, अंशवश्च श्लिष्टाः लग्नाः शीतेतरांशवो यस्य सः तस्मात् श्लिष्टशीतेतरांशोः हेतोः । कुलक्ष्माभृतः कुलपर्वताः तेषामीशस्य कुलक्ष्माभृदीशस्य मेरोः । सोत्कर्षां सातिशयां विभूषां कुरुत इव । कद्र्वाः अपत्यानि पुमांसः काद्रवेयाः सर्पाः । स्त्रीभ्यो ढगिति ढक् प्रत्ययः । ढस्येयादेशः । तेषां द्विषः गरुडस्य गुरुः ज्येष्ठः अरुणः । वः युष्माकम् । एनांसि पापानि । अह्नाय, झटिति शीघ्रमितिवत् । 'द्राक् झडितिमह्नायेत्यमरः । दूरं अत्यर्थं गमयतु ॥ ५६

பர்யாப்தம் தப்தசாமீகர கடகதடே
ஸ்லிஷ்ட சீதேதராம் சோ:
ஆஸீதத்ஸ்யந்தநாச்வாநுக்ருதி மரகதே
பத்மராகாயமாண: ।

ய; ஸோத்கர்ஷாம் விபூஷாம்
குருத இவ குலக்ஷ்மாப்ருதீசஸ்ய மேரோ:
ஏநாம்ஸ்யாஹ்நாய தூரம்
கமயது குரு: காத்ரவேயத்விஷோ வ: ॥ 56

இந்த சுலோகம் மயூர கவியின் ஓவியக் கவிதையாகக் காட்சி தருகிறது.

ஏழு குலாசலங்கள் எனப்படும் எல்லை. மலைகளுக்கு அதிபனான மேருமலையினுடைய **कुलक्ष्माभृदीशस्य** உருக்கி வார்த்த தங்கம் போல விளைகின்ற தாழ்வரையிலே **तप्तचामीकरकटकतटे** சூர்யனுடைய தேர்க்குதிரைகள் பாயும் போது அவற்றின் பச்சை நிறம் பரவி நிற்க, மேருவிற்கு மாணிக்கத்திலகம் போல் அமர்ந்திருக்கின்ற அருணன் உங்கள் பாவங்களை விரைவாக அகற்றட்டும்.

ஓவியன் ஒருவன், சிகப்பு நிறத்தைப் பகைப்புலனாக வைத்து ஓவியத்தை அமைத்து விடுகின்றான். அதிலெழுதும் பிம்பத்திற்கு சிவப்புத் திலகம் வைக்கவேண்டியிருக்கிறது. என்ன செய்வான்? அத் திலகத்திற்குப் பகைப்புலனாக பச்சை நிறத்தை லேசாக, நிழல் போல அந்தச் சிவப்பின் மேல் பூசி, அதன் மேல் சிவப்புத்திலகமிடுகிறான். இத்தகைய, கவியினுடைய ஓவியக் கலைத் திறன் இங்கே வெளிப்படுகிறது.

**नीत्वाश्वान्सप्त कक्ष्या इव नियमवशं वेत्रकल्पप्रतोद-**
**स्तूर्णं ध्वान्तस्य राशावितरजन इवोत्सारिते दूरभाजि ।**
**पूर्वं पृष्ठे रथस्य क्षितिभृदधिपतीन्दर्शयंस्त्रायतां व-**
**स्त्रैलोक्यास्थानदानोद्यतदिवसपतेः प्राक्प्रतीहारपालः ॥ ५७**

आनेनानूरोः प्रतीहारपालेन साम्यमुच्यते **नीत्वाश्वानिति** । सप्त अश्वान् सूर्यरथयुक्तानित्यर्थः । सप्तकक्ष्या इव । नियमेन यत्नेन । वशं

नीत्वा । ईषदसमाप्त: वेत्र: वेत्रकल्प: । "ईषदसमाप्तौ कल्पपूदेश्य-देशीयर्" इति कल्पप् प्रत्यय: । प्रतोद: मुक्ताश्वचोदनार्थं दण्ड: । वेत्रकल्प: प्रतोद: यस्य स: वेत्रकल्पपतोद: । उत्सारिते अपसारिते ध्वान्तस्य तमस: राशौ । इतरजन इव । तूर्णं शीघ्रम् । पूर्वं प्रथमम् । दूरं भजतीति दूरभाक् तस्मिन् दूरभाजि सति । पश्चात् क्षितिं बिभ्रतीति । क्षितिभृत: पर्वता: अन्यत्र राजान: तेषामधिपतीन् क्षत्रियराजान् । उन्नतत्वादिति भाव: । त्रयो लोका: त्रैलोक्यं तस्य आस्थानं तस्य दान विवरणं तस्मिन्नुद्यत: प्रवृत्त: त्रैलोक्यास्थानदानोन्नतश्चासौ दिवसपतिश्च तस्य त्रैलोक्यस्थानदानोद्यतदिवसपते: अन्यत्र स्थानदानोद्यतश्चास्य राज्ञ: प्रतीहारो राजाश्रयद्वारं, स्त्री द्रा द्वारं प्रतीहार:" इत्यमर: । प्रतीहारं पालयतीति प्रतीहारपलो द्वारपाल: । प्राक् प्रतीहार इव प्रथमा । द्वारपाल इव वर्तमान: । रथस्य पृष्ठे अग्रगामी । व: युष्मान् । त्रायतां रक्षतु ॥ ५७

நீத்வா ஸ்வாத், ஸப்த கக்ஷ்யா
இவ நியமவசம் வேத்ரகல்பப்ரதோத: -
தூர்ணம் த்வாந்தஸ்ய ராசௌ-
இதரஜன இவோத் ஸாரிதே தூரபாஜி ।
பூர்வம் ப்ருஷ்டே ரதஸ்ய க்ஷிதிப்ருததிபதீந்
தர்சயம் ஸ்த்ராயதாம் வ:
த்ரைலோக்யா ஸ்தாநதாநோ-
த்யத திவஸபதே: ப்ராக்ப்ரதீஹாரபால; ॥ 57

சூரியனுக்கு வழிகாட்டுவான் போன்றவன் அருணன், என்று இந்தச் சுலோகத்தில் கூறுகிறார் கவி.

சூரியன் பிரபஞ்சத்திற்கே நாயகன். அவனுடைய அரண்மனையே பிரபஞ்சம். அதற்கு ஏழு கட்டுமானங்கள்.

பிராகாரங்கள். அவற்றைத் தாண்டி சூரியனை அணுக வேண்டும். சூரியன் தர்பாருக்கு வருகின்றான். அவனுக்கு முன்னே பிரம்பு தாங்கி — ஏழு கட்டுக்களிலுள்ள இருட்டு என்னும் பாமர மக்களை விலக்கிவிட்டு, சூரியன் பிரவேசிக்கின்றபோது, மற்ற அரசர்கள் அணிவகுத்து நிற்குமிடத்தில் அவர்களை ஒவ்வொருவராக அறிமுகம் செய்து வைப்பது போல, மலைச் சிகரங்கள் சூரியனின் அருட் பார்வைக்கு இலக்காக்கி, அவரவர்க்குரிய ஆளுகைப் பிரதேசங்களை, ஆஸ்தானங்களை, வழங்குகின்ற சூரியனுக்கு வழிகாட்டுவான் போன்ற அருணன் உங்களைக் காக்கட்டும்.

पाशानाशान्तरालादरुण ! वरुणतो मा ग्रहीः प्रग्रहार्थं
तृष्णां कृष्णस्य चक्रे जहिहि नहि रथो याति मे नैकचक्रः ।
योक्तुं युग्यं किमुच्चैःश्रवसमभिलषस्याष्टमं वृत्रशत्रो-
स्त्यक्तान्यापेक्षविश्वोपकृतिरिति रविः शास्ति यं सोऽवताद्वः ॥ ५८

पाशान् इति ॥ हे अरुण ! आशानामन्तरालं मध्यं यस्य सः तस्मात् आशान्तरालात् । वरुणः वरुणतः पञ्चम्यास्तसिलिति तसिल्प्रत्ययः । प्रग्रहार्थं पाशान् मा ग्रहीः न गृहाण । कृष्णस्य विष्णोश्च चक्रे तृष्णामभिलाषां जहिहि मे रथः एकं चक्रं यस्य सः एकचक्रः । न हि याति । किं अभिलषसि ? अभिलाषालवं माकर्षीः । त्यक्ता अन्यापेक्षा यस्यास्सा विश्वस्य । उपकृतिः उपकारः । त्यक्ता अन्यापेक्षा विश्वोपकृतिर्यस्य सः त्यक्तान्यापेक्षविश्वोपकृतिः । रविः इत्यनेन प्रकारेण । यमरुणं शास्ति स अरुणः । वः युष्मान् । अवतु रक्षतु ॥ ५८

பாசாந் ஆசாந்தராலாத் அருண ! வருணதோ
மா க்ரஹீ: ப்ரக்ரஹார்தம்
த்ருஷ்ணாம் க்ருஷ்ணஸ்ய சக்ரே
ஜஹிஹி நஹி ரதோ யாதி மே நைகசக்ர: ।
யோக்தும் யுக்யம் கிமுச்சை:
ச்ரவஸமபிலஷஸ்யஷ்டமம் வ்ருத்ர சத்ரோ:
த்யக்தாந்யாபேக்ஷ விச்வா
உபக்ருதிரிவ ரவி: சாஸ்தி யம் ஸோ(அ)வதாத் வ: ॥ 58

இந்த சுலோகத்தில் சூரியன் அருணனுக்குக் கட்டளையிடுவதைப் போல அமைத்திருக்கிறார் மயூர கவி.

அருணா ! எனது ரதத்திலுள்ள குதிரைகளைச் செலுத்துவதற்குரிய கடிவாளக் கயிறு வேண்டும் என்பதற்காக வருணனின் பாசக் கயிற்றைப் பிடுங்கவேண்டாம். 'எனது ரதம் ஒரு சக்கரத்துடன் ஓடாதோ' என்று எண்ணி மற்றொரு சக்கரத்திற்காக விஷ்ணுவின் சுதர்சன சக்கரத்தைப் பெறவேண்டாம். எனது ரதத்தில் ஏழு குதிரைகளே இருக்கின்றன. எட்டாவது குதிரைக்காக, இந்திரனின் உச்சைசிரவஸ் என்னும் குதிரையையும் சேர்த்துக்கொள்ள விரும்புகிறாயா ? வேண்டாம். "நான் மற்றவரின் உதவியை நாடாமலே உலகிற்கு உதவ விரும்புகிறேன்", என்று சூரியனால் அறிவுறுத்தப்படுகின்ற அருணன் உங்களைக் காக்கட்டும்,

உலகியலில் தேருக்கு எட்டு குதிரைகளைப் பூட்டுவது மரபு. இவற்றைச் செலுத்த கடிவாளத்துடன் கூடிய கயறும் அவசியம். மேலும், ரதத்திற்குக் குறைந்தது இரண்டு சக்கரங்களாவது பொருத்தப்பட்டிருக்க வேண்டும். ஆனால், சூரியனுடைய தேர் ஒரு சக்கரத்திலேயே இயங்குகின்றது. இதில் ஏழு குதிரைகள் தான் பூட்டப்பட்டுள்ளன. இவைகளுக்குக் கடிவாளமும் இல்லை. இதனால் இத்தேரின் சாரதியான அருணன் இதிலுள்ள

குறைகளை நீக்கிக் கொள்ள நினைக்கின்றான். கடிவாளக் கயிற்றுக்கு வருணனின் பாசக் கயிற்றையும், மற்றொரு தேர்ச்சக்கரத்திற்குத் திருமாலின் சுதர்சனத்தையும், பிறிதொரு குதிரைக்காக இந்திரனின் குதிரையையும் பெற்று சூரியனின் தேரை முழுமையாக ஓட்டலாம் என்று அருணன் எண்ணுவதாகவும், அதனைத் தடுத்த சூரியன் நான் என்றுமே பிறருக்கு உதவி செய்வதற்கு, மற்றவர் உதவியை நாடாமல் ஸ்வதந்திரமாகவே செயல்படுகின்றவன்' என்று அருணனுக்கு சுட்டிக்காட்டுவதைக் கூறுகிறார் கவி.

**वज्रिन्जातं विकासीक्षणकमलवनं भासि नाभासि वह्ने**

**तातं नत्वाश्वपार्श्वान्नय यम! महिषं राक्षसा वीक्षिताःस्थ ।**

**सप्तीन्सिञ्च प्रचेतः! पवन! भज जवं वित्तपावेदितस्त्वं**

**वन्दे शर्वेति जल्पन्प्रतिदिशमधिपान्पातु पूष्णोऽग्रणीर्वः ॥ ५९**

वज्रिन्निति ॥ हे वज्रिन्! हे इन्द्र! विकसन्तीति विकासीनि ईक्षणानि नेत्राणि तान्येव कमलानि । विकासीनि च तानि ईक्षणकमलानि च तेषा वनम् । भासि प्रकाशवत् जातम् । तातं सूर्यं नत्वा यम! वह्णे नाभासि प्रकाशरहितोसीत्यर्थः सूर्योदयत्वात् । सम्बन्धिनं महिषं अश्वानां रथयुक्ताश्वानां पार्श्वं समीपं, नय प्रापय द्विकर्मकः । हे राक्षसाः! यूय वीक्षिताः स्थ । स्वास्मिन् क्षेमयुक्त हे प्रचेतः! वरुण! सिञ्च सप्तीन् अश्वान् । हे वित्तप कुबेर! त्वं आवेदितः सर्वलोकज्ञातोऽसि । धनन्दत्वादिति भावः । हे शर्व ईश्वर! वन्दे! इन्द्रादीनां नमस्कार्यत्वात् । इत्यनेन प्रकारेण, जल्पन् वदन्, पूष्णः सूर्यस्य । अग्रणीः अग्रेसरः

अरुणः, अग्रगामाभ्यान्तयतेरिति वक्तव्यमिति णत्वम् । दिक्षु दिक्षु प्रतिदिशं अधिपान् लोकपालान् । वः युष्मान् पातु ॥ ५९

வஜ்ரிஞ்ஜாதம் விகாஸீக்ஷண கமலவநம்
பாஸி நாபாஸி வஹ்நே
தாதம் நத்வாஸ்வ பார்ஸ்வத் நய யம!
மஹிஷம் ராக்ஷஸா வீக்ஷிதா: ஸ்த ।
ஸப்தீந் ஸிஞ்ச ப்ரசேத:! பவந!
பஜ ஜவம் வித்தபாவேதிதஸ்த்வம்
வந்தே சர்வேதி ஜல்பந் ப்ரதிசமதிபாந்
பாது புஷ்ணோऽக்ரணீர்வ: ॥ 59

சூரிய சாரதியான அருணன் சூரியோதயத்திற்கு முன்னரேயே உதித்துவிடுவதால், அவன் எண்திசைகளுக்குரிய அதிபதிகளையும் இன்முகம் கூறுவதுபோல இந்த சுலோகத்தைப் படைத்துள்ளார் கவி.

ஏ இந்திரனே! உனது ஆயிரம் கண்களாகிய கமலக் காடு மலர்ந்ததால் அழகாக விளங்குகின்றாயே! ஓ அக்நி தேவா! என்ன விஷயம்? உன் ஒளி குறைந்திருக்கிறதே! ஓ யமனே? உனது தந்தை உதயமாகிறார், அவரது அருகில் சென்று விரைவில் வணங்கிவிட்டு, உனது எருமை வாஹனத்தை குதிரைகளின் பக்கத்திலிருந்து (अश्वपार्श्वात् नय) அப்பால் கொண்டு போ. ஓ அரக்கர்களே! உங்களுடைய தலைவன் சூரியன் உங்களைக் கண்காணிக்கின்றான். எச்சரிக்கை!! ஓ வருணனே! ஏழு குதிரைகளையும் குளிப்பாட்டு. ஓ வாயுதேவா! குதிரைகளின் வேகத்திற்கு ஒத்தாற் போல வேகமாகப் போ. ஓ குபேரனே! நீ, செல்வங்களை நன்கு காப்பாற்றுகிறாய் என்பது தெரிவிக்கப்பட்டுவிட்டது. ஈசானனே! உம்மை வணங்குகிறேன். இங்ஙனம் எண்திசைக் காவலர்களிடம் தக்கபடி பேசிக்கொண்டு செல்கின்ற அருணன் உங்களைக் காக்கட்டும்,

नो मूर्च्छाच्छिन्नवाञ्छः श्रमविवशवपुर्नैव नाप्यास्यशोषी
पान्थः पथ्येतराणि क्षपयतु भवतां भास्वतोऽग्रेसरः सः ।
यं संश्रित्य त्रिलोकीमटति पटुतरैस्ताप्यमानो मयूखै-
रारादारामलेखामिव हरितमणिश्यामलामश्वपङ्क्तिम् ॥ ६०

आधानेन अरुणस्य पथिकेन साधर्म्यमुच्यते वैधर्म्यं च प्रतिपाद्यते "नो मूर्च्छेति" । यः अरुणः हरितमणिश्यामलां मरकतमणिवत् श्यामलां, आरादारामलेखामिव समीपे उपवनराजिमिव हरितमणिश्यामलां इव सूर्याश्वपङ्क्तिम् । त्रयाणां लोकानां समाहारः स्त्रिलोकी । तद्धितार्थो इत्यादिना उत्तरपद समासः । सङ्ख्यापूर्वोद्विगुरिति द्विगुसंज्ञा । अकारान्तोत्तरपदोद्विगुस्त्रियाविभाष्य इति ङीप् । संश्रित्याधिगच्छति । एतत् साधर्म्यं पटुतरैः अत्यन्तप्रचण्डैः मयूखैः सूर्यरश्मिभिः ताप्यमानः नैवं श्रमेण विवशं वपुः अङ्गं यस्य सः । श्रमविवशवपुः नो पान्थोऽपि नैवं अन्ये वदने शोषः शुष्कत्वं अस्यास्तीत्यास्यशोषीपान्थो नैव सन्ततोद्यगः पारद इव । भास्वतः सूर्यस्य । अग्रे सरन्तीत्यग्रेसरः । पुरः सरः । पान्थः पथिकः । सः अरुणः । भवतां पथ्येतराणि पापानि क्षपयतु ॥ ६०

நோ மூர்சாச்சின்ன வாஞ்ச;
ச்ரம விவச வபுர்நைவ நாப்யாஸ்ய சோஷீ
பாந்த: பத்யேதராணி க்ஷபயது பவதாம்
பாஸ்வதோ$\mathsf{S}$க்ரேஸர: ஸ; ।
யம் ஸம்ச்ருத்ய த்ரிலோகீம்
அடதி படுதரை: தாப்யமாநோ மயூகை:
ஆராதாராமலேகாமிவ ஹரிதமணி
ச்யாமலாம் அச்வபங்திம் ॥ 60

வழிப்போக்கன் கடுமையான சூரிய வெப்பத்தால் மிகவும் சோர்ந்து களைப்படைந்து மயங்குகின்றான். சோர்வால் அவனது மேனி வியர்வையாலும், களைப்பாலும் வாடி பொலிவிழந்து விடுகிறது. இதனால் தனக்கு ஏற்பட்ட களைப்பை மாற்றிக்கொள்ள அருகிலுள்ள பசுஞ்சோலையில் தங்கி இளைப்பாறுவான். இத்தகைய வழிப்போக்கனோ அருணன்? என்பதை கவி இந்த சுலோகத்தால் ஒப்புமைப்படுத்துகிறார்.

சாதாரண வழிப்போக்கன் வெயிலின் கடுமையால் மூர்ச்சித்து அவன் விரும்பியதைப் பெற சக்தியற்றவனாகிறான். ஆனால் அருணனாகிய வழிப்போக்கனுக்கு இத்தகைய துன்பம் ஒருபோதும் ஏற்படுவதில்லை. அருணனின் பணி மிகவும் கடினமானதுதான். கடுமையான வெப்பத்தைத் தாங்கிக் கொண்டு சூரியனுக்கே வழிகாட்ட வேண்டும். அருணனுடைய விருப்பம் நெடும் வழியைக் கடந்து எல்லையடைவது. அதனிடையே (அவன் வெப்பத்தால் தாக்கப்பட்டு) அவன் மூர்ச்சையடைவதில்லை சிரமம் தாங்காமல் அவன் உடல் களைத்துவிடுவதுமில்லை அவனுடைய வாய்வற்றிக் காய்ந்து விடுவதுமில்லை சூரியனுடைய கிரணங்களோ அவனுக்கு மிகவும் அருகே கொடுமையான வெப்பத்தைத் தந்துகொண்டுதான் இருக்கின்றன. இதோடுதான் அவன் மூவுலகையும் தாண்ட வேண்டும், ஆயினும், அவன் தளர்வு அடைவதில்லை. காரணம், அவனுடைய பச்சைக் குதிரைகள். அவற்றை நெருங்கி உட்கார்ந்துகொண்டு அவற்றின் மரகதமணி நிழலில் தண்மைபெற்று, களைப்பாறிக் கொண்டே தனது கடமையாற்றுகிறான். இத்தகைய அருணன் உங்கள் இன்னல்களைக் களையட்டும்.

सीदन्तोऽन्तर्निमज्जज्जडखुरमुसलाः सकले नाकनद्याः
स्कन्दन्तः कन्दरालीः कनकशिखरिणो मेखलासु स्खलन्तः ।

दूरं दूर्वास्थलोत्का मरकतदृषदि स्थास्नवो यन्नयाताः

पूष्णोऽश्वाः पूरयंस्तैस्तदवतु जवनैर्हुंकृतेनाग्रगो वः ॥ ६१

सीदन्त इति ॥ नाकनद्याः आकाशगङ्गायाः सिकतानां समूहः सैकतं तस्मिन् सैकते । अन्तः नाकनदीसिकतासमूहे निमज्जन्तः । खुरा मुसला इव खुरमुसलाः । जडाः मन्दं मन्दं पादविक्षेपाः जडाश्च ते खुरमुसलाश्च अन्तर्निमज्जन्तः जडखुरमुसलाः येषां ते अन्तर्निमज्जज्जड-खुरमुसलाः, सीदन्तः वलगन्तः कनकशिखरिणः मेरोः कन्दराणां गुहानां आलिः पङ्क्तिः ताः स्कन्दन्तः प्राप्नुवन्तः । मेखलासु मेरुमध्ये प्रदेशेषु-स्खलन्तः प्रतिहतिं प्राप्नुवन्तः । पूष्णोऽश्वाः सूर्यस्य अश्वाः । यद्दूरं नयाताः । हुंकृतेन हुङ्कारेण । जवनैः वेगशीलैः अश्वैः, तद्दूरं पूरयन् व्याप्नुवन् अग्रे गच्छतीत्यग्रगः अरुणः । वः युष्मान् । अवतु ॥ ६१

॥ इत्यनूरुवर्णनं समाप्तम् ॥

ஸீதந்தோऽந்த: நிமஜ்ஜஜ்ஜட குரமுஸலா:
ஸைகதே நாகநத்யா:
ஸ்கந்த: கந்தராலீ: கநகசிகரிணோ
மேகலாஸு: கலந்த: ।
தூரம் தூர்வாஸ்தலோத்கா
மரகதத்ருஷதி ஸ்தாஸ்நவோ யந்நயாதா;
பூஷ்ணோऽச்வா; பூரயம் ஸ்தை:
ததவது ஜவநை: ஹுங்க்ருதே நாக்ரகோ வ: ॥ 61

சூரியனின் தேர்க்குதிரைகள் வலிமையான கால்களைப் பெற்றிருப்பினும் அதன் குளம்புகள் ஆகாய கங்கைக் கரையின் மணலில் சிக்குண்டு, அவற்றை எடுக்க முடியாமல் சில கணங்கள் நின்றுவிடும் போதும், மேரு மலையிலுள்ள

குகைகளைத் தாண்டும் போதும், அதன் தாழ்வறைகளில் சிதறிக் கிடக்கும் மரகதமணிக் கற்களைக் கண்டு, அவை அருகம்புல்லோ' என நினைந்து, மதிமயங்கி அவற்றை மேய்வதற்காக ஓடாமல் நிற்கும்போதும், அருணன் தனது 'ஹும்' என்ற அதட்டும் குரலால் அந்தக் குதிரைகளை ஓடும்படிச் செய்கிறான். இத்தகு சிறப்பு மிகுந்த அருணன் உங்களைக் காக்கட்டும்.

(இதுவரை சூரிய சாரதி வர்ணனம்)

---

## ॥ अथ सूर्यरथवर्णनम् ॥

पीनोरःप्रेरिताभ्रैश्चरमखुरपुटाग्रस्थितैः प्रातरद्रा-

वादीर्घाङ्गैरुदस्तो हरिभिरुपगतासङ्गनिश्शब्दचक्रः ।

उत्तानानूरुमूर्धावनतिहठभवद्विप्रतीपप्रणामः

प्राह्णे श्रेयो विधत्तां सवितुरवतरन्व्योमवीथीं रथो वः ॥ ६२

पीनोरः इति ॥ पीनोरसा पीनेन उरसा वक्षसा । प्रेरितानि निरतानि अभ्राणि मेघाः यैः तैः पीनोरःप्रेरिताभ्रैः । चरमे पश्चिमे च ते खुरपुटे च तदग्रस्थितैः चरमखुरपुटाग्रस्थितैः । आसमन्ताद्दीर्घाणि अङ्गानि शरीराणि येषां तैः आदीर्घैः हरिभिः अश्वैः । प्रातः अद्रौ उदयाद्रौ उदस्तः उद्दीप्तः । उपगतः आसङ्गसम्बन्धो यस्य तत् । निर्गतः शब्दो यस्मात्तत् । निःशब्दं च तत् चक्रं च । उपगतासङ्ग निश्शब्दचक्रं यस्य उपगतासङ्गनिश्शब्दचक्रः । उत्तानः उन्नतः उत्तानश्चासावनूरुमूर्धा च तस्य अवनत्या प्रह्वीभावेनहठभवन् निर्मित इव भवन् विप्रतीपः विपरीतः

